REGISTERED No. M. 1500.

# நவசக்தி

# NAVASAKTI

(தமிழ் வாரப் பதிப்பு)

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.

| சந்தா விவரம். | | |
|---|---|---|
| வருட சந்தா | ரூ. | 5 0 |
| ஆறுமாத சந்தா | ,, | 3 0 |
| மூன்றுமாத சந்தா | ,, | 1 8 |
| வெளி நாடு-வருட சந்தா | ,, | 6 0 |

"வீடு பெறநில்"

"மாற்றானுக் கிடங்கொடேல்"

விளம்பர விகிதம்.
கலம் 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 7 0
சில்லரை விளம்பரம்-1 அங். 0 8
நீண்டகால விளம்பரஞ் செய்வோர் நேரே எங்கட்கு எழுதவும்.

"ஏற்பதிகழ்ச்சி"

சிலம்பு 2. துன்மதி௵ பங்குனி௴ ௩௨ (17—3—22) பரல் 20

எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே யெல்லாமு னுடையசெயலே, யெங்கணும் வியாபிநீ யென்றுசொலு மியல்பென்றிருக்காதி வேதமெல்லாம் - சொல்வான் முழக்கியது மிக்கவுப சாரமாச் சொல்லிறந்தவரும்விண்டு, சொன்னவையு மிவைநல்லதுவான பெருந் தொகுத்தநெறி தானுமிவையே - அல்லாம லில்லையென நன்குவறிந்தே னறிந்தபடி நின்றுசுகநான், ஆகாதவண்ணமே யிவ்வண்ண மாயினே னதுவுநின தருளென்னவே-கல்லாத வறிஞனுக் குள்ளேயுணர்த்தினை கதிக்குவகை யேதுபுகலாய், கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு கருணா கரக்கடவுளே.

* * *

அவனன்றி யோரணுவு மசையா தேனும் பெரிய வாப்தர்மொழி யொன்றுகண்டால், அறிவாவ தேதுசில வறியாமை யேதிவை யறிந்தார்க ளறியார்களார் - மௌனமொடிருந்ததா ரென்போ லுடம்பெலாம் வாயுாய்ப் பிதற்றுமவரார், மனதேனவு மோகமாயை யெங்கே யிருந்தவரும் வன்மையோ டிரக்கமெங்கே- புவனம் படைப்பதேன் கர்த்தவியமெவ்விடம் பூதபே தங்களெவ்விடம், பொய்மெய்த மகிதமேல் வருநன்மை தீமையொடு பொறைபொறு மையுமெவ்விடம்-எவர்சிறியரெவர்பெரிய ரெவருறவரெவர்பகைஞர் யாதுமுவ னன்றியுண்டோ-இகபர மிரண்டினிலுமுயிரினுக் குயிராகி யெங்குநிறை கின்றபொருளே.

* * *

எல்லாரு மின்புற்று
இருக்கநினைப் பதுவே
அல்லாமல் வேறொன்று
அறியேன் பராபரமே.

* * *

கொல்லா விரதங்
குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவது
என்னிச்சை பராபரமே.

* * *

எவ்வுயிரு மென்னுயிர்போல்
எண்ணி யிரங்கவுநின்
தெய்வ வருட்கருணை
செய்யாய் பராபரமே.

* * *

தம்முயிர்போ லெவ்வுயிருந்
தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று
செய்வேன் பராபரமே.

* * *

கொல்லா விரதமொன்று
கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ
அறியேன் பராபரமே.

* * *

அஞ்சலஞ்ச லென்றடிமைக்கு
அப்போதைக் கப்போதே
நெஞ்சி லுணர்த்து
நிறைவே பராபரமே.

* * *

மார்க்கண்டர்க்காக மறலிபட்ட
பாட்டை யுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன
பயங்காண் பராபரமே.

—தாயுமான சுவாமிகள்.

## அஹிம்சா பரமோதர்மா

கதர்முனையில் சுயராஜ்ஜியம்

சாந்தமய மௌனவிலங்குந் தனிப்பொருளை யுளத்தென்றும்
ஏந்தியுயிர் தமக்கெல்லா மினிமைசெய வுலகிடையே
போந்தகுண மலையாகும் புனிதநிறை கடலாகுங்
காந்தியடி யிணைமலரைக் கருத்திருத்தி வழுத்துவமே.-தி. வி. க

ஸ்ரீமான் டி. பிரகாசம் அவர்களுக்கு மஹாத்மா தாம் பிடிபடுவதற்கு முன்னர் அனுப்பிய செய்தி வருமாறு:—

சனிக்கிழமைவரை ஆமதாபாத்திலிருப்பேன்; ஞாயிறு திங்களில் சூரத்திலுறைவேன்; செவ்வாய்க்கிழமை பார்தோலி சேர்வேன். ஆனால் அரசாங்கத்தார் உள்ளங் கொண்டால்தான் நான் இவ் விடங்களுக்குச் செல்லக்கூடும் 'தங்கள் ஓய்வு வரம்பு கடந்து விட்டது; நீண்டகாலம் ஓய்வு பெற்றிருக்கிறீர்; இன்னும் ஏழு நாளுக்குள் தங்கள் சுமை நீங்கிவிடும்' என்னும் வதந்தி இடையறாது என்னைச் சுற்றிலும் முழங்கிய வண்ணமாயிருக்கிறது. மகிழ்ச்சி யூட்டக்கூடிய அவ்வதந்தி வழிநின்று, கீழ்வரும் முறைகளைக் குறிப்பிடுகிறேன். நான் பிடிபட்டால் நீங்களும், வெளியிலுள்ள ஏனையோரும் முழு அமைதியை நிலை பெறுத்தல் வேண்டும். அதுதான் தேசம் எனக்குச் செய்யக்கூடிய விழுமிய சிறப்பாகும். நான் எந்தச் சிறையில் இருந்தாலும், என் சிறைகாரணமாக ஒரு தலை உடைந்த தென்றாவது, ஒத்துழையாதார் ஒருவரை இகழ்ந்தாரென்றாவது, ஒரு கட்டிடம் கொளுத்தப்பட்ட தென்றாவது நான் கேள்விப்படுவேனாயின், அதைவிட என்னைத் துன்புறுத்துவது வேறொன்றுமில்லை. ஜனங்கள் அல்லது தொண்டர்கள் எனது குறிப்பை நன்கு உணர்ந்தவர்களாயின், அவர்கள் அமைதியை நிலை பெறுத்துபவர்களாவார்கள். நான் பிடிபடும் அன்றே, இந்தியா முழுவதும் வலியுறுத்தப்படாமல் ஜனங்களே வலிந்து எறியும் பரதேச ஆடைகள் எரிக்கப்பட்டன என்றும், கதருடையன்றிப் பிறிதோருடை தரிப்பதில்லை என்றும் உறுதியில் மனம் நிறுத்தப்பட்டதென்றும் நான் கேள்வி புறவேனாயின், அதைவிட ஆனந்தம் எனக்கு வேறில்லை. இந்தியாவில் இத்தகைய இயற்கை மணம் வீச மட்டும் நீள்கோலணம் அறிந்துவவ்வதே சாலும். முஸல்மான்கள் தங்கள் மதத்தின் பொருட்டுச் செய்ய வேண்டிய கடமைகளுள் குறைந்தது இதுவே. சர்க்காக்கள் ஏராளமாக விலையாகின்றன என்னுஞ் செய்தியும், நூற்கத்தெரியாத தொண்டர்கள் நூற்பதைப்பயில ஆவலுகின்றார்க ளென்னுஞ் செய்தியும் எனது அன்பை வளர்ப்பனவாகும். எதிர்கால நிகழ்ச்சிமுறையை உன்ன உன்ன, நமதிடையே பொல்லாத மூர்க்கசக்தி பரவிவருவதை நோக்க நோக்க, தன்னந் தனியனாய்ச் சட்ட மீறுவதுந்தவறு என்ற எண்ணம் எனக்கு உண்டாகிறது. பெரும்பான்மையோர் போற்றுதலைக் கருதித் தவறிழைப்பதைப் பார்க்கிலும், ஒருவர் போற்றலையும் எதிர்பாராது நியாய வழிபற்றி நடப்பதே மேன்மை. சிலராயிருப்பினும் பலராயிருப்பினும் அஹிம்சையில் நம்பிக்கையுள்ள மட்டும் நம் முறைகளை முற்று நிறைவேற்றுவதினின்றும் பிறழவேண்டுவதில்லை. அஃது இன்றாகின்றவேறின், [illegible] தேசம் சட்டமீறச் சித்தமாகும். அம் முயற்சியில் (அஹிம்சையில்) தவறின் தன்னைத் தனியராய்ச் சட்டமீறலுக்கும் சித்தமின்மை காட்டவேதாகும். காங்கிரஸ் திட்டத்தை நிறைவேற்றுதல் அரிய காரியமன்று. அகில இந்திய காங்கிரஸ் கூட்டத்தாரும், மாகாண காங்கிரஸ் கூட்டத்தாரும் ஒருமுகமாய் [illegible] திட்டத்தில் உறுதியுடன் [illegible] பெறுவாராயின், நமது வேலை மூன்றும் நிறைவேறக்கூடும். அவர் மனம் திட்டத்தின் மீது ஒன்றுவதையே இரங்கத்தக்கதாயிருக்கிறது. [illegible] காலத்துக்கேற்றபடி [illegible] கொள்கை வெளிப்படின் அதைத் தனியாகவாயினும், [illegible] எழுச்சியோடேயன்றாக வைக்கத்தோம் நிறைவேற்ற முனைந்து நிற்கவேண்டும்.

சோதியேலெனநீசோதனைதொடங்கிற்
குழயிர்விடத்தொடங்குவனுன்
நீதியேநிறைநின்றிருவருளறிய
நிகழ்த்தினேனிச்சயமிதுவே
ஓதியேயுணர்சற்குரும்பெருமானே
உயிர்க்குயிராகியவொளியே
ஆதியேநடுவேயந்தமேயாதிநடு
அந்தமில்லதோரறிவே.

* * *

அரைசெலாம்வழங்குந்தனியரசுநின்
அருளரசெனவறிந்தனன்பின்
உரைசெய்நின்னதுண்மேலுற்றபேராசை
உளமெலாமிடங்கொண்டதெந்தாய்
வரைசெயாமென்மேற்பொங்கிவாய்ததும்பி
வழிகின்றதென்வசங்கடந்தே
யிரைசெய்யேன்றுவிதனைக்கவல்லதுனை
யீந்தருளிற்றையிப்போதே.

* * *

அப்பாநான்பற்பலகாலறைந்தேனே யடியேன் அச்சமெலாந்துன்பமெலாமறுத்துவிரைந்துவந்தே, இப்பாரிலிதுதருணமென்னையடைந்தருளி எண்ணமெலாமுடித்தென்னையேன்று கொளாயெனிலோ, தப்பாமலுயிர்விடுவேன் சத்தியஞ்சத்தியநின் தாளிணைகளறியவிது வுடையோயெவர்க்குந், துப்பாகித் துணையாகித்துலங்கியமெய்த்துணையே சுத்தசிவானந்தவருட்சோதிநடத்தரசே.

* * *

படமுடியாதினித்துயரம் படமுடியாதரசே பட்டதெலாம்போதுமிந்தப்பயந்தீர்த்திப்பொழுதேன், உடலுயிராதியவெல்லாம் நீயெடுத்துக்கொண்டுன் உடலுயிராதியவெல்லாமுவந்தெனக்கேயளிப்பாய், வடலுற சிற்றம்பலத்தே வாழ்வாயென்கண்ணுண் மணியேயென்குருமணியேமாணிக்கமணியே, நடனசிகாமணியேயென்னவமணியே ஞான நன்மணியே பொன்மணியே நடராஜமணியே.

* * *

பரிகலத்தே திருவமுதம் படைத்துணவே பணித்தீர் பணித்தபின்றேவேன்னுடையகுவம்பார்க்கின்றீர், இருநிலத்தே பசித்தவர்க்கும்பசிக்கவல்லார் இவர் சிறியரிவர்பெரியரென்னல்வழக்கலவே, உரிமையுற்றேனுமக்கேயென்னுள்ளமன்றேயறிந்தீர் உடல்பொருளாவிகளையெலாமும்ம வெனக்கொண்டீர், தெருவகத்தே நான் வருந்தப்பார்த்திருந்தலழகோ சிவகாமவல்லிமகிழ்ந்திருநடநாயகரே.

* * *

ஓது தருணமையாளத் கெழுந்தருளுந்தருணம் இனித்தடையொன்றிலைகண்டாயென் மனமேநீதான், மதுவிழமொர்ப்போலேமயங்காதேகலங்கி வாடாதேமலங்காதேமலர்ந்துமகிழ்ந்திருப்பாய், குதுகலமேயிதுதொடங்கிக் குறைவிலைகாணமது குருவாணையமதுபெருங்குலதெய்வத்தாணை,பொதுவில்நடம்புரிகின்ற புண்ணியனுரேனக்குட் புணர்ந்துரைத்ததிருவார்த்தைபொன்வார்த்தையிதுவே.

—இராமலிங்க சுவாமிகள்.

# ‘நான் பிடிபட்டால்’

## சுய ராஜ்ஜியத்திற்கு இன்றியமையாதன எவை?

### அஹிம்சை, ஐக்கியம், கதருடை, தீண்டாமையை ஒழித்தல் ஆகிய இவையாம்

மகாத்மாகாந்தி ‘எங் இந்தியா’ பத்திரிகையில் எழுதுவது வருமாறு:—

### சட்ட மீறல் நிறுத்தம்

நான் கூடிய விரைவில் பிடிபடுவேன் என்ற வதந்தி மறுபடியும் ஆரம்பமாயிருக்கிறது. என்னைப் பிப்ரவரி 11, 12-ந் தேதிகளிலேயே கைதி செய்யாமல் விட்டு விட்டது தவறான காரியமாகுமென்றும் பார்தோலியில் செய்யப்பட்ட தீர்மானங்கள் அரசாங்கத்தாரின் முறையைப் பாதிக்க (affect) விட்டிருக்கக்கூடாதென்று சில உத்தியோகஸ்தர்கள் கருதினார்களென்றும் சொல்லப் படுகின்றன. என்னைக் கைதி செய்து நாடு கடத்தப்பட வேண்டு மென்று லண்டனில் செய்யப்பட்டு வரும் பலத்த கிளர்ச்சியைக் கவனியாமல் இருக்க அரசாங்கத்தாரால் முடியவில்லை யென்றும் சொல்லப்படுகிறது. சாத்வீக சட்டமறுப்பு இயக்கம் நிரந்தரமாக ஒழிந்து போகவேண்டுமென்று அரசாங்கத்தார் கருதினால், அரசாங்கத்தார் என்னைக் கைதி செய்தே தீர்வார்கள் என்று நான் கருதுகிறேன்.

### சௌரி சௌரா சம்பவம் கற்பிக்கும் பாடம்

ஜனங்கள் அனைவரும் சட்டங்களை மீறி நடப்பதற்கு இன்னும் சாத்வீகம் பூரணமாய் ஏற்படவில்லை யென்று கருதியே பார்தோலியில் ஜனங்கள் அனைவரும் சட்டங்களை மீறி நடப்பதை நிறுத்தி வைக்க வேண்டுமென்று நான் காரியக் கூட்டத்தாருக்கு ஆலோசனை கூறினேன். தற்போதைய நிலையில் தனிப்பட்ட நபர்கள் சட்டத்தை மீறி நடப்பதும் அமைதிக்குப் பங்கம் விளைவிக்கக் கூடியதா யிருப்பதால், தனிப்பட்ட நபர்களும் சட்டங்களை மீறி நடக்கக்கூடாதென்று நான் எல்லாத் தொண்டர்களுக்கும் ஆலோசனை கூறுகிறேன். சாத்வீக சட்ட மறுப்பு இயக்கத்திற்கு மிகவும் அமைதியான நிலைமை ஏற்படவேண்டும். வெளியிடங்களில் பலாத்காரம் இருந்து வருவதைக்காணவும் சௌரி சௌராவில் நடைபெற்ற சம்பவத்தைப் போலொத்த சம்பவம் இனிமேலும் நடைபெறாமல் இருப்பதற்காக ஐக்கியமாகாண அரசாங்கத்தார் துணைப் போலீசைக் கூட்டி வருகின்றனர் என்பதைக் கேட்கவும் எனக்கு கஷ்டமா யிருக்கின்றன. நடைபெறுமென்று சொல்லப்பட்டவை அனைத்தும் நடந்தேறினவென்று நான் கூறவில்லை. ஆனாலும் சில மாகாணங்களில் நடைபெற்ற பலாத்காரமான செயல்களைக் கவனியாமல் இருந்து விட முடியாது. எனக்கும் பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ருவுக்கும் அரசியல் சம்பந்தமாக வேற்றுமைகள் இருந்த போதிலும், அவர் வேண்டுமென்றே உண்மைகளை மறைத்துச் சொல்ல மாட்டாரென்று நான் நம்புகிறேன். ஜனங்களின் நன்மைக்காக அதிகமாகப் பாடுபடும் பொது ஜன ஊழியர்களில் அவரும் ஒருவராவர். அவர் சாதாரணமாய் ஏமாந்து போகக் கூடியவரல்லர். ஆகவே எவ்விஷயத்தைப்பற்றியும் தம் அபிப்பிராயத்தை அவர் தெரிவித்தால் அதை நான் கவனியாது விடுவதேயில்லை. சௌரி சௌரா சம்பவ விஷயமாக அவரது முடிவு ஒரு விதமாய் இருந்தாலும், சௌரி சௌரா சம்பவத்தைப்பற்றி அவர் கூறியிருப்பதைக்கவனியாது விட்டு விடக்கூடவில்லை. ஐக்கிய மாகாணத்தில் ஜனங்கள் பலாத்காரச் செயல்களில் நாட்டங் கொண்டிருக்கிறார்களென்றும் அறியாமையால் தவறாய்க் காரியங்களை ஜனங்கள் செய்து வருகிறார்களென்றும், ஜமீந்தாரர்களும் பிறரும் எனக்குக் கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள். அவைகளையும் பொருட்படுத்தாமல் போட்டுவிட முடியவில்லை.

### பாரெய்லி சம்பவம்

பாரெய்லியில் நடைபெற்ற சம்பவங்களைப்பற்றிய அறிக்கை ஒன்று என்னிடமிருக்கிறது. அவ்வறிக்கையில் காங்கிரஸ் கார்யதரிசியார் கையெழுத்திட்டுள்ளார். அதிகாரிகள் பைத்தியக்காரத்தனமாய் நடந்து கொண்டு தங்களையே கோபத்தில் மறந்து விட்டார்கள். அறிக்கையின் படி பார்க்கப்போனால் நாமும் குற்றஞ் செய்யாமல் இருக்கவில்லை. தொண்டர்கள் ஊர்வலம்வந்தது சாத்வீகமான செயலாகாது. நமக்குள் அபிப்பிராய பேதமிருந்தும், ஊர்வலம் நடைபெறவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. ஊர் வலத்தில் சேர்ந்தவர்கள் பலாத்காரமான செயல்களைச் செய்யாமல் இருந்தாலும் கூட்டத்தின் நோக்கம் பலாத்காரத்திலேயே யிருந்தது. ஊர் வலத்தை நடத்தியதனால் ஒருவிதமான பிரயோஜனமும் ஏற்பட்டுப்போகவில்லை. அதிகாரிகள் ஊர்வலம் சம்பந்தமாகத் தாங்கள் நடந்ததற்கு மாறாய் நடந்து கொண்டிருக்கலாம். சுயராஜ்யக் கொடிகள் விஷயமாகவும், டவுன்ஹால் விஷயமாகவும் அதிகாரிகள் தலையிடாமல் இருந்திருக்கவேண்டும். அதிகாரிகள் செவ்வையாய்க் காரியங்களைச் செய்வார்களென்று கருதுவதை நாம் விட்டுவிட்டோம். அதிகாரிகள் நடந்துகொள்ளும் விதத்தை அறிந்திருக்கிறபடியால் நாம் அவர்களுக்குக் கொதிப்பை உண்டாக்கக் கூடிய விதமாய்க் காரியங்களைச் செய்யாமல் விட்டுவிட்டிருக்க வேண்டும். ஐக்கிய மாகாண அரசாங்கத்தார் சிறிய விஷயத்தை மிகப் பெரிய விஷயமாக ஆக்கிவிடுகிறார்கள். அவர்கள் தாங்கள் செய்த கோபமூட்டக்கூடிய செயல்களையும், சௌரி சௌராவில் இறந்தவர்கள் கோப மூட்டியதையும் மறைத்து வைப்பது புதிதான விஷயமல்ல. அதைப் பற்றிக் கேள்வி கேட்க நம்மால் முடியாது. நாம் அவர்களுக்கு ஒன்றையும் செய்யவில்லை. சாத்வீக சட்ட மறுப்பு இயக்கம் நிறுத்திவைக்கப்பட்டமைக்குக் காரணம் நாம் பிராயச் சித்தம் செய்ய வேண்டுமென்பதேயாம். ‘சாத்வீகம் என்பதன் முழுப்பொருளையும்ஜனங்கள் அறிந்துகொண்டு மனோவாக்குக் காயங்களிலும் அஹிம்சையை அநுஷ்டித்துக்கொண்டு வந்து அப்போதுங் கூட அரசாங்கத்தார் ஜனவிருப்பத்தைமதித்து நடக்காவிட்டால், சமயத்திற்குத் தகுந்தாப்போல் தனிப்பட்ட நபர்கள் சட்டங்களை மீறி நடக்கலாமா, அல்லது மொத்தமாகச் சட்டங்களை மீறி நடக்கலாமா என்பதை நான் எடுத்துக் கூறுவேன். ஜனங்கள் தங்கள் பிறப்புரிமைகளை விட்டுவதாயிருந்தாலல்லாமல் சாத்வீக சட்டமறுப்பு இயக்கம் நிறுத்திவிடப் படமாட்டாது.

### சட்டமறுப்பு இயக்கம் கெட்டதல்ல

சாத்வீக சட்டமறுப்பு இயக்கம் பெருத்த குற்றமாகுமென்று கூறி, அதைக்கடுந் தண்டனைக்கு உட்படுத்தவேண்டுமென்று பிறப்பாலே வீரர்களாய் இருக்கப்பட்ட ஆங்கிலேயர் கூறுவதைக் கேட்டு அவர்கள் உண்மையாக அம்மாதிரி சொல்லவில்லையென்று நான் நினைக்கிறேன். ஆயுதச்சண்டைகளை விசேஷமாகப் பாராட்டி, சமயம் நேர்ந்தபோது அவைகளைக் கைக்கொண்டிருக்க, சாத்வீக சட்டமறுப்பை நாம் ஆரம்பிக்கக் கூடாதென்று அவர்கள் சொல்வதன் பொருள் விளங்கவில்லை. இந்தியாவில் சுத்த சாத்வீகமான நிலைமை ஏற்படுவது முடியாத காரியமாகுமென்று அவர்கள் சொல்வதன் காரணத்தை நான் அறிவேன். அதை நான் நம்ப முடியாது. ஆயினும் அவர்கள் எடுத்துக் கூறும் தடையை நான் பாராட்டுகிறேன். சாத்வீக சட்டமறுப்புஇயக்கத்தைகெட்ட இயக்கத்தைப்போல் பாவித்துக்கண்டிப்பதன் பொருள் எனக்கு விளங்கவில்லை. சாத்வீக சட்டமறுப்பு இயக்கத்தைப்பற்றிப் பேசுவதை விட்டுவிட வேண்டுமென்று கூறுவதானது, சாந்தத்தைப்பற்றி எடுத்துக் கூறுவதைவிட வேண்டுமென்று சொல்வதற்கொப்பாகும். இவர்களுக்காக நான் தற்கொலை செய்து கொள்வதா?

### என் வாரப் பத்திரிகைகள்

என்னால் நடத்தப்பட்டு வரும் ‘எங் இந்தியா’ குஜராத்தி மொழியில் நடத்தப்படும் ‘நவஜீவன்’ ஹிந்திமொழியில் நடத்தப்படும் ‘நவஜீவன்’ ஆகிய இம்மூன்று பத்திரிகைகளை அரசாங்கத்தார் நிறுத்திவிட ஏற்பாடு செய்து வருகிறார்களென்று எனக்குச் சொல்லப்பட்டது. இவ்வதந்தி ஆதாரமற்றதாய்ப் போய்விட வேண்டுமென்று நான் நம்புகிறேன். இம் மூன்று பத்திரிகைகளும் சாந்தத்தையும் நல்லெண்ணங்களையுமே ஜனங்களிடையில் பரப்பி வருகின்றன. உண்மையையே இது வரையில் நான் வாசகர்களுக்கு எடுத்துக்கூறிவந்தேன். தப்பான விஷயங்கள் ஏதாவது பத்திரிகைகளில் வந்திருந்தால் அவைகள் அவ்வப்போதே திருத்திவிடப்படும். பத்திரிகைகளின் சந்தாதாரர்கள் நாள்தோறும் பெருகிக்கொண்டேபோகிறார்கள். பத்திரிகை நடத்துகிறவர்கள் சிலர் சம்பளம் பெற்றுக் கொண்டும் சிலர் சம்பளம் பெறாமலும் வேலை செய்துகொண்டு வருகிறார்கள். வரும் இலாபமெல்லாம் சந்தாதாரர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்படுகிறது. இல்லாவிட்டால் வேறு பொது நன்மைக்கான வேலைகளுக்காகச் செலவழிக்கப் படுகிறது. இப்பத்திரிகைகள் நிறுத்தப்பட்டுப் போவதைப் பற்றி நான் கவலைகொள்ளாமல் இருக்க மாட்டேன். இப்பத்திரிகைகளை நிறுத்திவிடுவது அரசாங்கத்தாருக்கு மிகச் சுலபமானது. இப்பத்திரிகைகளைப் பதிப்பிப்போரும் வெளியிடுவோரும் என்னுடைய நண்பர்களும் சகாக்களுமாவர். அவர்களுக்கும் எனக்கும் ஏற்பட்டிருக்கும் ஒப்பந்தம் அரசாங்கத்தார் பத்திரிகைகளுக்கு ஈடுகொணம் கேட்ட அந்த க்ஷணத்திலேயே பத்திரிகைகளை நிறுத்திவிட வேண்டுமென்பதேயாம். என்னுடைய செயல்களைப் பற்றி அரசாங்கத்தார் எவ்விதமாய்க் கருதினாலும், இப்பத்திரிகைகளின் மூலமாய் நான் அஹிம்சையையும் உண்மையையும் எனக்குத் தெரிந்தபடி எடுத்துக் காட்டுவதாக அவர்கள் நினைத்து வருகிறார்களென்ற நோக்கத்தின்மேலேயே இப்பத்திரிகைகளை நான் நடத்தி வருகிறேன்.

### நான் பிடிபட்டால்

அரசாங்கத்தார் என்னைக் கைதி செய்தாலும், அல்லது என் பத்திரிகைகளை நடக்கவொட்டாது தடை செய்தாலும் ஜனங்கள் அனைவரும் சாந்தமாக நடந்து கொள்ளவேண்டுமென்று நான் கூறுகிறேன். என்னைக் கைதி செய்தால் சச்சரவும் இரத்தச் சேதமும் உண்டாகிவிடுமென்ற காரணத்திற்காகவே என்னைக் கைதி செய்யாமல் இருக்கிறார்களென்று கூறுவதைக் கண்டு எனக்கு வருத்தமாகவேயிருக்கிறது. என்னைக் கைதி செய்வதனால் அமைதியின்மை ஏற்படுமென்றால் இது வரை அஹிம்சா தர்மத்தைப் போதித்ததன் பிரயோஜனம் என்னை? அம்மாதிரி ஏற்பட்டால் அஃது இந்தியா சாந்தமான வழியில் முன்னேற முடியாது என்பதைக் காட்டுகிறது. அது அதிகார வர்க்கத்தினருக்கு வெற்றி யாகிறது. மிதவாதிகள், இந்தியா சாத்வீக சட்டமறுப்புக்குச் சரிப்பட்டுவராது என்று கூறியிருந்ததும் மெய்யாகி விடுகிறது. அரசாங்கத்தாரும் அவர்களது நண்பர்களும் கொண்டிருக்கும் அபிப்பிராயங்கள் நடவாமல்படி காங்கிரஸ் கிலாபத் ஊழியர்கள் பார்த்துக் கொள்ளவேண்டும்; அது அவர்கள் கடமையாகிறது. இம்மாதிரி செய்தால் நாம் அதிகமாக வெற்றிபெற்றவர்கள் ஆவோம்

### ஆர்ப்பாட்டம் கூடாது

வேலை நிறுத்தங்கள் ஊர் வலங்கள் வேறு விதமான ஆர்ப்பாட்டங்கள் ஒன்றுமே நடைபெறக் கூடாது. நான் பிடிபட்டால் அப்போது ஜனங்கள் அமைதியுடனிருப்பதையே அவர்கள் எனக்குச் செய்யும் பெருத்த கௌரவம் என்று நான் எண்ணுகிறேன். காங்கிரஸ் வேலைகளை இடைவிடாது செய்துகொண்டு போக வேண்டும். இது வரை அந்நிய நாட்டுத் துணிகளை விலக்காமலிருந்தவர்கள் இப்போதேனும் அந்நிய நாட்டுத் துணிகளை விலக்கிக் கையால் செய்யப்பட்ட துணிகளை உடுத்திக்கொள்ளவேண்டும். விலக்கிய அந்நியநாட்டுத்துணிகளைக் கொளுத்திவிடவேண்டும். பார்தோலியில் நிறைவேற்றப்பட்ட நிர்மாண வேலைகளை ஜனங்கள் செய்து வந்தால் அவர்கள் என்னையும் மற்றவர்களையும் விடுவித்தவர்களாவார்கள். அவர்களால் இதுவல்லாமல் சுயராஜ்யத்தை ஸ்தாபித்து பஞ்சாப் கிலாபத் அநீதிக்கும் பரிகாரம்தேடிவைக்கமுடியும். சுயராஜ்யத்திற்கு நான்குஅங்களாக இருக்கப்பட்டவை: அஹிம்சை, இந்து-முஸ்லிம்-சீக்-பார்சி, கிறிஸ்தவ-யூத ஐக்கியம், தீண்டாமையை அடியோடொழித்தல், கதர் உடைதரித்தல் ஆகிய இவைகளாகும்.

### நான்கு நன்மைகள்

என்னைக் கைதி செய்வதன் மூலமாய் ஜனங்களுக்கு என் நன்மை யேற்படக் கூடாதென்றும் எனக்குத் தோன்றுகிறது. முதலாவது என்னிடத்தில் ஏதோ தெய்வீக சக்தி இருந்து வருவதாக ஜனங்கள் நினைத்து வருவது பொய்யாகிப்போகும். இரண்டாவது எனது செல்வாக்கால் ஒத்துழையாத் திட்டத்தை ஜனங்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்பதும் அவர்களுக்கென சொந்தமாய் அதில் நம்பிக்கை இல்லை யென்று சொல்லப்பட்டு வருவதும் பொய்யாகிப் போகும். மூன்றுவது ஒத்துழையாத் திட்டத்தின் ஆதிகாரணர் போய்விட்ட பின்னரும் ஜனங்கள் தங்களுடைய வேலைகளைத் திறமையாக நடத்தி சுய ராஜ்யத்தை அடைந்து விடப் பக்குவமடைந்து விட்டதாக கண் கூடாகக் காட்ட முடியும். நான்காவது எனது சுயநலத்தை உத்தேசிக்கு மளவில் எனக்கும் சற்றுஓய்வு எடுத்துக்கொள்ளக்கூடும். எனக்கு ஓய்வு வேண்டியதென்பதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்களென்று நான் நினைக்கிறேன்.

# உலகில் சிறந்தது எது?

## அஹிம்சை கடை பிடித்தலே

### காந்தியடிகள் எழுதுவது

மகாத்மாகாந்தி ‘எங் இந்தியா’ பத்திரிகையில் எழுதுவதன் சாராம்சம் வருமாறு:—

அஹிம்சா தர்மத்தைக் கைக்கொண்டவர் தம்மை இம்சித்தவரிடத்திலும் கோபமடையக்கூடாது. கேடு செய்தவனுக்குத் திரும்பவும் கேடு செய்ய விரும்பக்கூடாது. கேடு செய்தவனுக்கும் நன்மையே யுண்டாக வேண்டுமேன்று எண்ணவேண்டும். அவனுக்கு ஒரு விதமான கேடுதலும் செய்ய எண்ணக்கூடாது. பிறன் என்ன் கேடுதல் விளைவித்தாலும் அதற்குப்பொறுத்துக்கொண்டிருக்க வேண்டும். ஆகையால் அஹிம்சை என்பது நிரபரதத்தன்மையானது. முழுமையிலும் அஹிம்சையைக் கைக்கொள்வதானது எல்லா உயிர்களிடத்திலும் கருணையையே காட்டுவதை யொக்கும். ஆகவே நாம் பிராணிகளிடத்திலும் ஊர்வன முதலான ஜந்துக்களிடத்திலும் கருணை காட்டவேண்டும். நாம் கொன்று தின்று நம்முடைய ஆசைகளைத் தீர்த்துக்கொள்வதற்காக அவைகள் படைக்கப்படவில்லை. இறைவன் இவைகளை யெல்லாம் ஏன் படைத்தார் என்பதை நாம் அறிந்தால் அவைகளுக்கு இம்சை செய்ய ஒருப்படமாட்டோம். ஆகவே அஹிம்சை என்பது எல்லா ஜீவராசிகளிடத்திலும் இரக்கங் காட்டுவதேயாகின்றது. அஹிம்சையே அன்பு என்று எல்லாக் கிரந்தங்களும் கூறுகின்றன.

அஹிம்சை எல்லாவற்றையும் கடந்த ஒரு பூரணமான நிலையாகும். மனிதவர்க்கத்தார் அனைவரும் இயல்பாகவே அதை நாடிச் செல்கின்றனர். மனிதன் அஹிம்சையை முற்றுங் கொள்ளினும் அவன் தெய்வமாக மாட்டான். ஆனால் அப்போதுதான் அவன் உண்மையில் மனிதனாகின்றான். நம்மிடத்தில் மிருகசுபாவமும் மனிதசுபாவமும் கலந்து நிற்கின்றன. நாம் கோபங் கொண்டு நமக்குக் கேடுதல் செய்தவனுக்குத் திரும்பவும் கேடுதல் செய்ய நினைக்கும்போது நாம் மிருகத் தன்மையைக் கொண்டிருக்கிறோம், நாம்உயிர்வாழ்வதற்கு இன்றியமையாதது பதிலுக்குப்பதில் கேடுதல் செய்தலே யென்று நம்புவதாக வேஷம் போடுகிறோம், ஆனால் கிரந்தங்களில் பதிலுக்குப் பதில் கேடுதல் செய்ய வேண்டியது அவசியமென்று கூறப்பட்டிருக்கவில்லை. நாம் செய்யவேண்டியது கோப மூட்டப்பட்ட போதும் சாந்தமாய் இருக்க வேண்டியதேயாகும். முக்கியமாய் நமக்கு வேண்டற்பாலது பொறுமையேயாகும். அதிகமான பொறுமையைக் கைக் கொள்ளாமல் மேலான நிலையை அடைவது முடியாத காரியமாகும். ஆகவே மனிதவர்க்கத்தாரின் விருது கஷ்டப்படுதலேயாம். நாம் பூரணமாக முயற்சி செய்தால் முழு வெற்றியையும் அடைய முடியும். முழுமையிலும் ஜீவராசிகளை நேசிக்க வேண்டுமென்பதே என்னுடைய விருப்பமாகும். இதை நான் காங்கிரஸ் கிலாபத் கூட்டங்களினின்று உபதேசிக்கவில்லை. என்னுடைய வரையறைகள் எனக்குச் சரியாய்த் தெரிந்திருக்கின்றன. காங்கிரஸ் கிலாபத் ஸ்தாபனங்கள் மூலமாக இவ்வுபதேசத்தை முழுமையிலும் பரப்புவது முடியாத காரியமென்பதை நான் அறிவேன். எல்லாரும் ஒரே நொடியில் இந்தத் தர்மத்தைக் கைக்கொள்ளவேண்டுமேன்று கூறுவது பலிதமாகாதென்பதும்எனக்குத்தெரியும். இத்தர்மத்தைச் சிறிது சிறிதாய்த்தான் நான் காங்கிரஸ் கிலாபத் ஸ்தாபனங்கள் மூலமாய் ஜனங்களுக்கு எடுத்துக் கூறிவருகிறேன். காங்கிரஸ் கிலாபத் ஸ்தாபனங்கள் ஒப்புக்கொண்டிருப்பது மேற்கூறிய தர்மத்தின் சிறிது பாகமேயாகும். உண்மையான தொண்டர்கள் கிடைத்தால் கூடிய விரைவில் அத்தர்மத்தின் ஒரு பாகத்தை ஜனங்களிடையில் பரப்பலாம். ஆனால் இந்தத்தர்மத்தை அப்படியே அநுசரிப்பதற்கும் அதன் ஒருபாகத்தை அநுசரிப்பதற்கும் பரிட்சைமுறை ஒன்றுதான். ஒருபானை சோற்றுக்கு ஒரு சோறுதான் பதம். என் சகோதரரிடத்தில் நான் காட்டும் அஹிம்சா தர்மத்திற்கும் உலகினரிடையில் காட்டும் அஹிம்சா தர்மத்திற்கும் வித்தியாசமிருக்கக் கூடாது. எனது சகோதரரிடத்தில் கொண்டிருக்கும் அன்பையே உலகத்தினரிடத்திலும் கொண்டிருக்க வேண்டும்.

ஒரு முறையைக் குறிப்பிட்ட கால அளவுவரையில் அநுஷ்டிப்பது ஒரு கொள்கையாகும். ஆனால் பூரணமாக அநுஷ்டிப்பது தான் உத்தமமான கொள்கையாகும். ஆனால் ஒரு முறையாகச் சத்தியத்தைக்கைக்கொள்வதற்கும் ஒருகொள்கையாக அதை அநுஷ்டிப்பதற்கும் வித்தியாசமில்லை. சத்தியத்தை முறையாகக்கொண்டிருக்கும் வர்த்தகன் ஒருவன், சத்தியத்தைக்கொள்கையாகக் கொண்டிருக்கும் வர்த்தகன் ஒருவன் விற்கிற விலைக்கே தன் சரக்குகளையும் விற்பான். இருவருக்கும் உள்ளவித்தியாசம், சத்தியத்தை ஒரு முறையாகக்கொண்டிருக்கும் வர்த்தகன் நஷ்டம் வந்தபோது அதை விட்டுவிடுவதும், சத்தியத்தைக்கொள்கையாகக் கொண்டிருக்கும் வியாபாரி நஷ்டத்தையும் பாராட்டாது அதைக் கைப்பற்றிக்கொண்டு போதலுமேயாகும்.

ஒத்துழையாதார் இராஜீய முறையில் கைக்கொண்டுபோதும் அஹிம்சா தர்மம் பெரும்பாலோரைப் பொறுத்தமட்டில் இந்தப் பரீட்சைக்குஈடுகொடுப்பதாகக்காணவில்லை. அதனாலேயே நமது போராட்டம் வளர்ந்து வருகிறது. ஆங்கிலேயர்களிடம் விட்டுக் கொடுக்கும் சுபாவம் இல்லை யென்று யாரும் குறை கூறவேண்டாம். கடினமான சித்தமுள்ளவர்களையும் அன்பால் வயப்படுத்த வேண்டும். அவர்கள் இணங்காமல் இருப்பதற்கு நமது அன்பு பலமாக இல்லாமல் இருப்பதேயாகும். நமது அஹிம்சா தர்மம் முழுமையிலும் சத்தியத்தைக் கடைப்பிடித்ததாய் இருக்கவேண்டும். அஹிம்சா தர்மத்தைக் கடைப்பிடிப்பவர்கள் என்று கூறிக்கொள்வதாயிருந்தால், ஆங்கிலேயர்களுக்கும் அவர்களுடன் சேர்ந்திருக்கும் நம் தேச மக்களுக்கும் கேடு செய்ய நினைக்கக்கூடாது. நம்மில் பெரும்பாலோர் கேடு செய்ய நினைக்கிறோம். சக்திக்குறைவின் காரணமாகவோ அல்லது பலாத்காரமான செயல்களைச் செய்யாததினால் நம் வாக்குறுதியைப் பூர்த்தி செய்யாதவர்கள் ஆவோம் என்ற மூட நம்பிக்கையினாலோ நாம் ஒன்றையும் செய்யாமல் இருக்கிறோம். நாம் செய்துகொண்ட சத்தியத்தின்படி இனியும் பழிக்குப்பழி வாங்க வேண்டுமேன்று நினைக்க இடமில்லை. நம்மில் சிலர் பழிக்குப் பழி வாங்கும் வழக்கத்தைச் சிறிது காலத்திற்கே நிறுத்திவைப்பதாகத் தெரிகிறது.

நான் சொல்வதைத் தப்பாகக் கருதிவிடக் கூடாது. அஹிம்சா தர்மத்தைக் கைக்கொண்டிருக்கிறோமாகையால் ஆங்கில நிர்வாகிகளிடமும் சிநேகபாவமாய் நடந்துகொள்ள வேண்டும். சில இடங்களில் ஆங்கிலேயர்களும் ஒத்துழைப்பவர்களும் அபாயமின்றி நடமாடக் கூடாத நிலையில் இருந்துவருகிறார்கள் என்பதைக்கேட்டு நான் வருத்தமடைகிறேன். சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற கூட்டமொன்றில் நிகழ்ந்தசம்பவங்கள் அஹிம்சா தர்மத்திற்கு முற்றிலும் விரோதமானவை. அக்கூட்டத்தில் பேசிய ஒருவர் என்னை அவமதித்ததாகக் கருதி அவரை அவமானப் படுத்தியது கேவலம் கெட்டகாரியமாகும். அவர்களுடைய நண்பரான ஸ்ரீமான் ஆண்ட்ரூஸின் மனதைப் புண்படுத்தி விட்டார்கள். அவர்களுடைய கட்சிக்கும் தீங்கிழைத்துக் கொண்டார்கள். என்னைச் சுத்த அயோக்கியனென்று கூறப் பேசிய அன்பர் நினைத்திருந்தால் அம்மாதிரியே கூற அன்னாருக்கு உரிமையுண்டு என்று நான் கருதுகிறேன். அறிவின்மை கோப மூட்டக்கூடிய காரணமாகாது. ஒத்துழையாக்காரர்கள் எதற்கும் அடங்கியிருக்க வேண்டும். நான் அயோக்கியத்தனமாக நடந்தால் கோபமூட்டப்படக்கூடியது நியாயமே. ஒத்துழையாதார்களை அஹிம்சாதர்மத்தினின்று பிறழ்ந்தவர்கள் என்று கூற இக்காரணமே போதுமானது.

ஒரு வரையறைக்குட்பட்ட அஹிம்சா தர்மத்தையும் கற்றுக்கொள்வது பலருக்குக் கஷ்டமாக இருக்கலாம். அப்படியானால் அஹிம்சா தர்மத்தைக் கடைப்பிடிப்பதாகச் சொல்லிக்கொள்ளலாகாது. இம்மாதிரியாகச் சொல்லி விட்டதனாலேயே பலாத்காரத்திலிறங்கவேண்டுமேன்றும் நினைத்துக்கொள்ளுதலாகாது, அப்பொழுது ஜனங்கள் அஹிம்சா தர்மங்கட்கு உட்பட்டிருக்கவேண்டிய அவசியமிராது.

அப்போது என் போன்றவர்கள் சௌரி சௌராவில் நடைபெற்ற சம்பவங்களுக்குப் பொறுப்பு ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியமில்லை, அப்போது எல்லாவித பொறுப்பையும் நீத்து சொற்பத் தொகையினராய் உள்ள அஹிம்சா தர்மிகள் மறைவாகவே இருந்து வருவார்கள். அஹிம்சா தர்மம் நமது முறையாக இருக்க வேண்டுமானால் அதன்படி நாம் நடந்து கொள்ளவேண்டியது அத்தியாவசியமாகின்றது.

அஹிம்சா தர்மத்தில் நம்பிக்கை வைத்து அதன்படி நடப்பதாயிருந்தால் நாம் ஆங்கிலேயர்களுடனும் ஒத்துழைப்போர்களுடனும் நேசபாவத்தை உண்டாக்கிக் கொள்ளவேண்டும். நம்மால் அவர்களுக்கு ஒருவித கேடுதலும் நேரிடவில்லை யென்று அவர்கள் கூறும்படியாய் நாம் நடந்துகொள்ள வேண்டும். அவர்கள் நம்மைச் சிநேகிதர்களாகப் பாவிக்கும் படி செய்ய வேண்டும். அவர்களை நம் பிரசங்க மேடைகளுக்கு வரவழைக்க வேண்டும். பொது இடங்களில் நண்பர்கள் என்ற முறையில் நாம் அவர்களைச் சந்திக்க வேண்டும். இம்மாதிரியாய் நிகழ்வதற்குரிய முறைகளைச் செய்யவேண்டும். நாம் பலாத்காரத்தையும் துரோகத்தையும் கெட்ட எண்ணங்களையும் கைக்கொள்ளக் கூடாது. நம்மை நம் வேலையைக்கொண்டு அளந்து பார்க்கவேண்டும். பலாத்காரமற்ற முறையில் சுயராஜ்யம் அடைவதென்பது நம்முடைய காரியங்களைப்பலாத்காரமின்றிநடத்திக்கொண்டு போவதேயாகும். அதாவதுபணிதல்-கீழ்ப்படிதல் வேண்டும். மிருகபலத்தையே அறிந்திருக்கும் ஸ்ரீமான் சர்ச்சில் ஐரிஷ் விஷயத்திற்கும் இந்திய விஷயத்திற்கும் வித்தியாசமிருக்கிறதென்று கூறுவது சரியேயாகும். ஐரிஷ்காரர்கள் சுயராஜ்யத்தைப் பலாத்காரத்தைக் கொண்டு பெற்றார்களாகையால் சமயம் நேர்ந்தபோது பலாத்காரத்தைக்கொண்டு அதை நிலை நிறுத்திக்கொள்ளும் திறமையைப் பெற்றிருக்கிறார்கள் என்று ஸ்ரீமான் சர்ச்சில் கருதுகிறார்; இந்தியா உண்மையில் சுயராஜ்யத்தை யடைந்தால் அதைப் பலாத்காரமற்ற வழியிலேயே காப்பாற்றிக்கொள்ளும் சக்தியைப் பெறவேண்டும். இதை உண்மையில் கண்கூடாகக் காட்டாவிட்டால் ஸ்ரீமான் சர்ச்சில் பலாத்காரமற்ற வழிகளால் சுயராஜ்யம் பெறுவது சாத்தியமான காரியம் என்பதை நம்பமாட்டார். முழுபலாத்காரமற்றஉணர்ச்சி நாடெங்கணும் ஏற்படவேண்டும். அப்போதுதான் ஸ்ரீமான் சர்ச்சிலின் சந்தேகத்தை நிவர்த்தி செய்யக்கூடும்.

அஹிம்சாதர்மத்தின் மூலமாக சுயராஜ்யம் பெறுவதாகச் சொல்கையில் இடையில் கலகமும் புரட்சியும் ஏற்படக்கூடுமென்று சொல்ல முடியாது. கனிந்த பழம் தானாகவே மரத்திலிருந்து விழுவதைப்போல் ஆங்கிலேயர்களிடமிருந்து ஜனப் பிரதிநிதிகளிடம் அதிகாரம் வந்து சேரவேண்டும். அவ்வித நிலைமை ஏற்படுவது கூடாத காரியமாகத் தோன்றலாம். ஆனால் அதுதான் அஹிம்சா தர்மமாகும். அத்தகைய நிலையையுண்டுபண்ணலாம் என்ற நம்பிக்கை பிரசாரகர்களிடமிருந்து வராவிட்டால் அவர்கள் பலாத்காரமற்ற திட்டத்தை விடுத்து வேறு விதமான திட்டத்தை ஏற்படுத்திக்கொள்ளலாம். மனதிலொன்றும் செய்கையிலொன்றும் கூடாது. நமது திட்டத்தில் நம்பிக்கை இருந்தால் பிரிட்டிஷார் ஆயுதத்திற்கு இணங்கி வருவதுபோல அன்புக்கும் இணங்கக்கூடியவர்களென்ற நம்பிக்கை இருக்க வேண்டும்.

# மகாத்மாகாந்தி எங்கிருக்கிறார்?

## அவரது அரிய தியாகம்

### ஸ்ரீமான் எம். சிங்காரவேலு செட்டியார் எழுதுவது:—

2500 வருடங்களுக்கு முன் ஜனங்களின் நன்மையைக் கருதிப் புத்தர்பிரான் தியாகம் செய்ததை உலகம் நன்கறிந்திருக்கிறது. இப்போது மகாத்மாகாந்தி புத்தரைப் போலவே ஜனங்களின் நன்மையைக் கருதித் தியாகம் செய்து வருவதை உலகம் அறிந்து வருகிறது. புத்தர் பிரான் உபதேசித்தருளிய தர்ம மார்க்கங்கள் ஜனங்களுக்கு அளவிலா நன்மைகளைச் செய்துவருகின்றன. அதைப்போலவே மகாத்மா காந்தி கைதி செய்யப்பட்டுச் சிறையில் வைக்கப்பட்டிருப்பதன் பயனும் அவர் விடுத்திருக்கும் அரிய செய்திகள் அநேக லட்சக் கணக்கான ஜனங்களின் மனதில் ஒருவித விடுதலை எண்ணத்தை யுண்டாக்கி வருகின்றன. மகாத்மா காந்தி கைதி செய்யப்படுவர் என்று நீண்ட நாட்களாய் வதந்தி உலவி வந்தது. அவ்வதந்தி இப்போது உண்மையாகப்போய்விட்டது. மகாத்மா காந்தியைப் பிடிப்பதற்குக் காரணமாயிருந்தவர்கள் நன்மையடைவார்களாக. மகாத்மா காந்தி தீமை செய்தவனுக்கும் நன்மையே செய்ய வேண்டுமென்று கூறியது ஒவ்வொருவர் மனதிலும் உதித்திருக்கிறது. இவ் வெண்ணத்தில் பதிந்திருக்கும்நுட்பமானபொருள்கள் மிகக்கொடிய சித்த முள்ளவர்களையும் நல்லவர்களாய்ச் செய்துவிடும்.

நம்மிடையில் அரசியல் ஞானத்தைப் பரப்பிய அந்த மகான் அரசியலில் முன்னேற்றம் அடைவதற்காகவும் புதியதொரு துறையைக் காட்டியுள்ளார். அவரது அரிய தியாகத்தினால் உலகத்தில் அடங்கியிருக்கும் ஜாதியினருக்கு ஒருவிதமான விடுதலை ஏற்பட்டிருக்கிறது. அவருடைய செய்தி யாதென்பதை இதற்கு முன்னதாகவே உலகம் அறிந்திருக்கிறது. தற்போது அவர் பிடிக்கப்பட்டிருப்பதும் அவர் மீது விசாரணையை நடத்தி வருவதும் உலகத்தில் அடங்கியிருக்கும் ஜாதிகள் விடுதலையடையும் என்ற நம்பிக்கை உண்டாக்கும். இதுவரை உலகம் சண்டையின் பயனும் வேறுபல கேடுதல் காரணமாகவும் கஷ்டப்பட்டுக்கொண்டு வந்திருக்கிறது. அவைகளெல்லாம் இப்போது ஒழிந்துவருகின்றன. ஒவ்வொரு அரசனும் தன் கீழ் அடங்கியிருக்கும் ஜனங்களுடன் சமானமாய்க் காரியங்களை நடத்தக் கூடிய ஒரு வழியைச் சாந்தத்தையே உருவாகக் கொண்ட மகாத்மாகாட்டியுள்ளார். உலகத்திலுள்ள ஒரு மனிதனுக்கும் தீங்கிழையாமல் தங்கள் சுதந்தரத்தை யடைவதற்காக மூவாயிரம் லட்ச ஜனங்கள் செய்து வரும் காரியங்களை நாம் கவனித்து வருகிறோம். ஆயிரக்கணக்கான ஜனங்கள் அமைதியாகவும் சாந்தமாகவும் சந்தோஷத்துடனும் சிறைக் கூடங்களுக்குச் செல்வதை நாம் பார்க்கிறோம். சுதந்தரம் பெறுதற்காகப் பலாத்காரமான செயல்களைச் செய்யாமல் கஷ்டத்தையே கோரும் ஓர் இனத்தவர் மிருக பலத்தைக்கைக்கொள்ளும் இனத்தவர்களைக்காட்டிலும் மேலானவர்கள் ஆவர். இதர நாடுகளில் ஜனங்களின் விடுதலைக்காகப் பாடுபட்ட மகான்கள் அரசர்கள் இயற்றிய கொடுமைகளைப் பொறுக்க முடியாமலும், சிறைவாசத்திற்கு அஞ்சியும் தங்கள் தங்கள் நாட்டைவிடுத்து வேறு நாடுகளுக்கு ஓடிவிட்டிருக்கிறனர். நம்முடைய நாட்டிலோ வெனில் அதற்கு மாறான நிலை காணப்படுகிறது. இந்நாட்டில் சிறந்த தலைவர்கள் தண்டனைகளுக்குப் பயந்து வெளிநாடுகளுக்கு ஓடிவிடாமல் தண்டனைகளைச் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டு துன்பத்தை இன்பமாகக் கருதி வருகிறார்கள்.

நம்முடைய நாட்டின் விடுதலைக்காகத் தோன்றிய மகானைப் பிடித்து சிறையில் அடைத்துவிட்டால் ஜனங்கள் அவரது வழியைப் பின்பற்றிச் சுயராஜ்யத்தை அடையத் தயங்குவார்களென்று அதிகாரிகள் கருதுகின்றனரா? இம்மாதிரியான பொய்மையான எண்ணங்களை அவர்கள் கொண்டிருந்தால் அது அவர்களின் அறியாமையைக் காட்டுவதாகின்றது. கூடிய சீக்கிரத்தில் சுயராஜ்யத்தை அடைந்துவிட வேண்டுமேன்று ஜனங்கள் பரிபூரணமாய்க் கொண்டுள்ள எண்ணங்களை அபராதங்கள் விதித்தும் தண்டனைகள் விதித்தும் உடைத்துவிடலாம் என்று நினைத்து வருவதைப் படித்தவர்கள் பைத்தியக்காரத்தனமாகுமென்று எண்ணுகிறார்கள்.

நம்மில் சிலர் வருத்தங் காரணமாக மகாத்மா எங்கிருக்கிறார் என்று கேட்கிறோம். அவர் இங்கிருக்கிறார்; அங்கிருக்கிறார்; எங்குமிருக்கிறார். அவர் நம் எல்லாருடைய இருதயங்களிலும் வசிந்துவருகிறார். நம்தேசத்து 30 கோடிமக்களுடைய மனதிலும் அவர் உறைகின்றார். எங்கெங்கு சுதந்தரப்போராட்டம் நடைபெறுகின்றதோ அவ்விடங்களிலும், சுதந்தரத்தையடைவதற்காகப் பலாத்காரமற்ற முறை கையாளப்படுகின்ற விடங்களிலும் மகாத்மாகாந்தி இருந்து வருகிறார். அவரது அன்பும் ஆர்வமும் பரிணமியாத இடமில்லை யென்றே கூற வேண்டியிருக்கிறது. அவரை நேசியாத இடமும் இல்லை யென்றே கூறவேண்டும். சிறைச் சாலைக்குள் அவரது உயிரை அடைத்துவிடலாமென்று நினைப்பவர்கள் அறிவற்றவர்களாவர். அவரின் செய்தி மனிதனால் ஏற்படுத்தப்பட்ட எல்லா எல்லைகளையும் கடந்து ஒவ்வொருவர் உள்ளத்திலும் திகழ்ந்து வருகின்றது. தம் வாழ்நாட்கள் முழுமையையும் உண்மைக்காகவும் நியாயத்திற்காகவும் அஹிம்சைக்காகவும் உழைத்த மகான் இப்போது சிறைவாசம் செய்கிறார். அவரது உழைப்பு தேசத்தினருக்குப் புதியதொரு எழுச்சியை யுண்டாக்கினதல்லாமல் நன்மையையும் செய்திருக்கிறது. அவர் தம் சொந்த காரியங்களுக்காகக் கஷ்டப்படவில்லை; உலகத்தினரின் நன்மைக்காகவே கஷ்டப்படுகிறார். இதைக்காட்டிலும் மேலானது மனிதனுக்கு எது வேண்டியிருக்கிறது? நாம் அனைவரும் அவரது உபதேசங்கள்படி காரியங்களைச் செய்துகொண்டு போவோமாக.

‘ஹிந்து’

# மகாத்மாகாந்தியும்

## ஜன ஆசார சீர்திருத்தமும் ஊழியமும்

### II

(சுவாமி உருத்திர கோடீசுவரர் எழுதியது)

மகாத்மாகாந்தியின் சென்ற வாரத்து “யௌவன இந்தியா” பத்திரிகையையும் வாசித்துப் பார்க்குமிடத்து, அதன் கண் ஜனசார ஜன ஊழியக் கருத்துக்களே ததும்பி வழிகின்றன. அதில் “ஒத்துழையாமையைத் தம் மேற்கொண்டோர் ஆங்கிலேயர்களுக்காதல், அல்லது அவர்களோடு ஒத்துழைத்தவலகாமேம் நம் நாட்டார்களுக்காதல் தீமை செய்தலாகாது; ஆங்கிலேய ஆட்சியினர் பாலும் அவர்களோடு ஒத்துழைக்கும் நம்மவர்பாலும் அன்பும் நட்புரிமையுமே பாராட்டல் வேண்டும்; பொதுஜன நன்மையை நாடும் பொது சபைகளில் எல்லாரும் கண்பர்களாகி ஒருவர் பால் ஒருவர் நெருங்கிக் கலந்து அளவளாவல்வேண்டும்; கோபம், கொடுஞ்செயல் கன்ருகமாட்டா; அஹிம்சா தர்மம் ஒத்துழையாதாரால் முற்றிலுங் கடைப்பிடிக்கப்படுதல் வேண்டும்; சாந்தமே எங்கும் எக்காலத்தும் எவர் பாலும் நிலைபெறல்வேண்டும்; பலாத்காரம், இம்சை முதலானவைகளை விளக்கும் மாறுதல்களில் நான் சம்பந்தப்படமாட்டேன்; இந்துக்களும் மகம்மதியர்களும் இவ் வஹிம்சா முறையை முற்றிலும் கைக்கொள்வார்களாக; அவர்கள் இதனைக் கொள்ளாமல் என்னையும் தவிர்த்துவிடுவரேல், நான்என்னுடையசீவகாருணியப் பிரசாரத்தைச் செய்துகொண்டேதான் இருப்பேன்; சுயராஜ்யப் பேற்றைச் சம்பாதிப்பதற்குரிய இவ் வமைதி முறையில் நம்பகம் இல்லாதவர்கள் காங்கிரஸ் என்னும் தேசிய சங்கத்தில் இருப்புப் பெறார் ஆவர்; தேச ஆட்சி சீர்திருத்த வேலை செய்வதில் நேருந்துன்பங்களைச் சகித்திடமாட்டாதவர்கள் பொது ஜனத் தொண்டு செய்து துன்புறுவோர்க்கெல்லாம் இனிமை செய்யலாம்,” என்ற அன்பு பெருக்கெடுக்க- அன்பு ஒரு வடிவெனப் போலியும் காந்திப் பெருமான் எழுதிட்டமையைக் காணலாம். அவைகளெல்லாம் உள்ளுந்தோறும் உள்ளுந்தோறும் உள்ளம் உருக்குவனவாய் உள்ளன. அக்காந்தி மகான் நம் தேச ஆட்சி சீர்திருத்த சம்பந்தமாகத் தாம் செய்த அரிய செயல்களில் தம் மனோசக்தியைச் சாலவுங் காட்டி வீரத்தன்மையை அடைந்தவர். இதை எழுதும் நான், போர் வீரர், சமயவீரர், தேசீயவீரர் முதலானவர்களை வழிபடுபவனல்லன்; சமயக்கட்சிகளில் எதனையும், தேசீயக் கட்சிகளில் எதனையுஞ் சார்ந்தவனல்லன்; ஆனால், சீவகாருணிய கருமங்களில் சிரத்தை கொண்டிருப்பவன் அதனால் தமக்கென வாழாமல் பிற மனிதர்களுக்கென வாழும் காந்தியின் சீவகாருணிய போதனைகள் இதுபோது என் உள்ளத்தை உருக்குகின்றன. ஆ! அவர் அதன் போதனைகளை என்னென்று உரைக்கேன்! என்னென்று உரைக்கேன்! அதன்வழி காட்டும் அவர் தம் இயல்பை நாளும் முன்னெல்லாம் நன்கு உணராமல் அந்தோ! அவரைப் பழித்தேன்; இழித்தேன்; அப்பெரியாரை நேரே பார்த்து அளவளாவப் பெற்றிலேன். அம்மவோ! பிழை செய்தேன். அவருடைய இச் சன்மார்க்க போதனைகள் நம் நாட்டினராலும், பிற நாட்டினராலும் அநுஷ்டிக்கப்படுமானால் அவை எவரையுந் துன்பங்களினின்று விடுதலை செய்யும் என்பது திண்ணமன்றோ? இதனை எவரும் உடன்படுவரன்றோ? “ஐஸ்டிஸ்” பத்திரிகையும் இப் போதனைகளை “அபாயமில்லாதன” என்று எடுத்துக்கூறுவதாயிற்று. அதனால் நான் அப் பெரியோர் பால் பேர் அன்பும் பெருநன்றியும் பாராட்டுகின்றேன். அக்காருணிய வள்ளல் தம் நற்போதனைகள் இத்தேசத்தில் எங்கும் பரவி நன்மை உண்டாவதற்கு முன்னரே ஐயகோ! அவர் சர்க்காரால் பிடியுண்டனரே! இஃது இறைவன் இட்ட ஆணையோ? இறைவன் செயலை எவர் அறிவர்? அப்பரம காருணிய மூர்த்திகளின் யாக்கை ஒரு கால் சிறைக்களத்திறினும் அன்னார் தம் போதனைகள் எல்லாச் சாதியினராலும், எல்லாச் சமயத்தினராலும், தேச ஆட்சி சீர்திருத்த சம்பந்தமான எல்லாக் கட்சியினராலும் நன்கு கடைப்பிடிக்கப்படுவனவாக. அதனால் நம் தேசத்திற்குப் பெருமை உண்டாகும்.

சீவகாருணியப் பெருந்தகையாகிய காந்தி முனிவர் கூறியபடி கற்றார் கல்லாதார் யாவரால் அறியப்படாதனவும், இகழப்படுவனவுமாகிய ஜன சமுதாய விஷயங்கள் பல இருக்கின்றன, “வறுமைத்துன்பம்,” “பிச்சைக்காரர்,” “சாதுக்கள்,” “குற்றஞ்செய்வோர்,” “பொதுப்பெண்கள்,” “பின்னடைந்த சாதியார்கள்,” “தீண்டாமை,” “தொற்று நோய்கள்,” “மரணத்தொகையின் மிகுதி” முதலான விஷயங்களெல்லாம் ஜன சமுதாய சீர்திருத்தத்தின் பாற்படும். இப்பெரிய விஷயங்களெல்லாம் நன்கு ஆராயப்பெற்று ஜன சமுதாயத்தில் உள்ள பல வேறு துன்பங்கள் ஒழிவடைய முயற்சி செய்யப்படுதல் வேண்டும். இத்தகைய ஜன சமுதாய சீர்திருத்தங்களும் ஊழியங்களுஞ் செய்யுங்கால் புத்தபகவான், ஆசிரியர் திருவள்ளுவனர், மாதவிமகள் மணிமேகலை, தாயுமான சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள் காந்தி முனிவர் முதலானவர்களைப் போல ஜனங்களிடத்தில் மெய்யன்பும் இரக்கமுங்கொண்டு செய்தல் வேண்டும். பொதுஜன ஊழிய வேலையில் சாதி வேறுபாடுகளையும், சாதிப் போராட்டங்களையும் கொண்டு வருவது நியாய விரோதமாகும். பிராமணர் பிராமணரல்லாதார் என்னும் வேற்றுமைகள், பொதுஜனஊழியத்தில் பாராட்டப்படல் ஆகா. சமய வேறுபாடுகளும் பொதுஜன சேவையில் ஆகா. சைவர், வைணவர், ஆரிய சமாஜத்தார், பிரம சமாஜத்தார், மகம்மதியர், கிறிஸ்தவர் எல்லாரும் தத்தம் சமயத்திறங்களின் வேறுபாடுகளைக் கருதாமல் பொதுஜன ஊழியத்தில் ஒன்று சேர்தல் வேண்டும். முடிவாகக் கூறுமிடத்து, இக்காலத்தில் பரமகாருணிய சிரேட்ட குருமணியாக அமர்ந்துள்ள காந்தியடிகள் உபதேசித்தருளுமாறு ஜனசமுதாய சீர்திருத்தங்களிலும் ஊழியங்களிலும் சர்க்காரோடு ஒத்துழைத்தலைக் கடைப்பிடித்துள்ளோரும், சர்க்காரோடு ஒத்துழையாமையைத் தம்மேற்கொண்டுள்ளோரும் தம்முள் மன ஒருமைப்பாடுடையவர்களாய் இன்போடு ஒத்துழைக்கக் கடமைப்படுவோர்களாக.

### தேச பந்து தாஸர்

தேசபந்து சித்தரஞ்சனதாஸர் இது காலை அலிப்பூர் சிறைச்சாலையில் சுகோயால் பீடிக்கப்பட்டு வருந்துகிறாரென்றும் அவரது தேக நிலை (General health) நன்றாகவே யிருக்கிறதென்றும், வைத்தியர் குறிப்பிடும் போஜனத்தை அவர் பிறரைக்கொண்டு தயாரித்துச்சாப்பிட அநுமதி கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும் ஒரு செய்தி கூறுகிறது.

மாற்றுருக்கிடங்கொடேல். ஏற்றிதிருஞ்சத்தி. ஓடுபெறநில். நவசக்தி

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற் கோமாற்கே நாமென்றும் மீளவா ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே."—(அப்பர்)

சென்னை 1922ஹு மார்ச்சுமீ 17உ.

## சிறையோ? நிறையோ?

நமது உண்மை எங்கே? நமது பொறுமை எங்கே? நமது உயிர் எங்கே? நமது காந்தியடிகள் எங்கே? உண்மையும் பொறுமையும் அருளும் உயிரும் யாண்டும் என்றும் இலங்குவன. அவைகளின் வடிவான காந்தியடிகளும் யாண்டும் பொலிகிறார். காந்தியடிகள் இப்பொழுது எங்கும் விளங்குகிறார். உண்மையும் பொறுமையும் அருளும் உயிரும் யாண்டும் மிளிர்வது, அறியாமையால் மூடப்பட்ட மாக்களுக்குப் புலனாவதில்லை. அறியாமை நீங்கி அறிவு விளங்கப் பெற்ற மக்களுக்கு அவை எங்கணுந் திகழ்வது புலனாகும். அதுபோல ஊனக்கண் கொண்டு பார்ப்பார்க்குக் காந்தியடிகள் சிறையில் உறைவதாகத் தோன்றும்; ஞானக்கண் கொண்டு பார்ப்பார்க்கு அப்பெரியார் எங்கும் நிறைவாயிருப்பது தோன்றும். காந்தியடிகள் சிறையிலிருக்கிறார் என்பது கயவர் கூற்று; அவர் நிறைவில் வாழ்கிறார் என்பது அறிஞர் கூற்று.

உண்மை உள்ள விடத்தில் பொறுமையும் அருளும் உயிர் விளக்கமும் ஒளிரு மென்பது ஈண்டுக் கவனிக்கத் தக்கது. காந்தியடிகள் உண்மை கடைபிடித்து, எவர் என்னகூறினும் என்ன செய்யினும் பொறுமை யிழவாது காத்து, அப்பொறுமை மேம்பாட்டால் எவ்வுயிர்க்குந் தீங்கு செய்யாத அருள் விளங்கப்பெற்று, அருள்விளக்கத்தால் 'நான் தேகமல்ல' என்ற உணர்வு பெற்று, அவ்வுணர்வால் தம் உடல் பொருள் ஆவி மூன்றையும் உலகத்துக்குஅர்ப்பணஞ்செய்த மகாத்மா ஆதலால், அவரை உண்மை யென்றும் பொறுமை என்றும் அருள் என்றும் உயிர் என்றும் அழைக்கிறோம்.

காந்தியடிகள் உடல் சிறையிலிருக்கிறதன்றி அவரது ஆத்மசக்தி எங்கணும் வீசுகிறது. உண்மையை - பொறுமையை - அருளை - அஹிம்சையை போதித்து வந்த பெரியாரை எந்தக் கல்சுவர் கட்டுப்படுத்தும்? எந்தப் பாசந்தான் கட்டுப்படுத்தும்? 'எந்த உயிர்க்குந் தீங்கு செய்யாதே' என்னும் பேரறத்தைப் போதித்த பெருமான் வாழுமிடம் சிறையாமோ? அக்குற்றம் உடையார்க்கன்றோ அது சிறையாகத் தோன்றும்? காந்தியடிகள் 'நிறை'யில் வாழ்கிறார். அவர் சிறையில் உறைகிறாரென்று - சகோதரர்களே! சகோதரிகளே! - கருதாதேயுங்கள், பேரானந்த நிறைவில் காந்தியடிகள் உள்ளம் திளிம்பிக் கொண்டிருக்கிறது.

சபர்மதி ஆசிரமத்திலிருந்த காந்தியடிகள் உடல் இப்பொழுது சபர்மதி சிறைக்கட்டிடத்தில் இருக்கிறது. ஆசிரமத்திலிருந்து அவர் செய்து வந்த தொண்டைச் சிறைக்கட்டிடத்தினுமிருந்து அவர் செய்துவருவார். அடிகள் முன்னேயிடத்தில் பேசியும் எழுதியும் செய்துவந்த தொண்டைப் பின்னேயிடத்தில் மனதால் செய்து வருவார். வாக்குத்தொண்டு காயத்தொண்டுசெய்து நிலைத்த நெஞ்சம் உடையவர் ஆற்றும் மானதத் தொண்டு, வாக்குத் தொண்டினும் காயத் தொண்டினுஞ் சிறந்து விளங்கும். காந்தியடிகள் அளவில்லா வாக்கு காயத்தொண்டுகளைச் செய்திருக்கிறார். ஆதலால் அவரது மானதத் தொண்டு இனித் தேசத்துக்குப்பெரு நலஞ் செய்யும்.

பண்டைக் காலத்தில் சத்தியத்தின் பொருட்டு அரிச்சந்திரன் நகரம் விடுத்து ஈமங்காத்ததையும், தந்தைசொல் காத்தற்பொருட்டு ஸ்ரீராமபிரான் மகுடாபிஷேகத்தை வெறுத்து வனம்புக்கதையும், ஞானத்தின் பொருட்டுப் புத்தர் பிரான் திடீரென அரச போகங்க ளெல்லாவற்றையுந் துறந்து காடு நோக்கியதையும் - புராணங்களில் - இதிகாசங்களில் - வேறு பலநூல்களில் வாசிக்கிறோம். இதோ இந்நாளில், நம் கண்முன்னே, ஒருவர் உலகத்தின் பொருட்டு - அஹிம்சையின் பொருட்டு—எல்லாவற்றையுந் துறந்து ஒற்றைக் கலையணிந்து சிறையில் வதிகிறார். காந்தியடிகள் செல்வமெங்கே? மனையெங்கே? மக்களெங்கே? அவைகளெல்லா வற்றையும் அஹிம்சையின் பொருட்டு அவர் தியாகஞ் செய்தார். அத்தியாகத்தின் பயனை இப்பொழுது தவங்கிடக்கிறார். தற்கால நாகரிகக் கல்வியால் செருக்குக் கொண்டு திரியும் சகோதரர்கள் காந்தியடிகள் நிலையைக் கருதியாவது மனந்திரும்புவார்களாக.

காந்தியடிகள் ஓயாது இரவு பகல் அஹிம்சையைப் போதித்து வந்தார். அவர் போதனை இப்பொழுது இந்தியமக்களை ஆள்கிறது. காந்தியடிகள் "நான் பிடிபட்டால், எல்லாரும் அஹிம்சா தருமத்தைக் கையாண்டு சாந்தவழிநின்று பணிசெய்க" என்று கூறியபடியே தேசம் அஹிம்சா தருமத்தைக் கடைப்பிடித்து, சாந்தவழி நிற்பதைக் காண்கிறோம். இக்காட்சி லார்ட் ரெடிங்கிக்கும், ஸர் ஜார்ஜ் லாயிட்டுக்கும் புலனாமோ? காந்தியடிகள் ஒருவர் உபதேச வழி முப்பத்து முக்கோடி மைந்தர்கள் நிற்கிறார்கள். என்ன ஆச்சரியம்! காந்தியடிகள் - அஹிம்சையைக் கடைப்பிடிக்குமாறு - ஆயுதங்களால் சட்டங்களால் பயமுறுத்தினாரா? இல்லை; இல்லை. ஆயுதங்களாலும் அநாகரிகக் கூட்டங்களாலும் ஒரு மனிதக் கூட்டத்தை இன்னொரு மனிதக்கூட்டம் கட்டுப்படுத்தி நடாத்துவது தருமநெறியாமோ? காந்தியடிகள் ஒருவர் - சேனையில்லாதவர் - ஆயுதமில்லாதவர் - சிறிய வடிவினர் - இன் சொல்லால், அனுஷ்டானத்தால், தியாகத்தால் மன்பதையை நடத்துகிறார். அவரது இன் சொல்லும் அனுஷ்டானமும் தியாகமும் மக்களை ஆள்கின்றன. காந்தியடிகள் சிறை புகும்போது, கலகங்களும் குழப்பங்களும் கொலைகளும் நடைபெறுமென்று சிலர் எதிர்பார்த்திருக்கலாம். மூர்க்க சக்தி யெழுச்சியே காணோம். எங்கணும் சாந்தம்; எங்கணும் முகமலர்ச்சி; எங்கணும் அஹிம்சா தருமப்பெருமை. காந்தியடிகள் மெல்லிய உடலில் நுழைந்துள்ள ஆத்மசக்தியின் வலிமை என்னே! என்னே!! காந்தியடிகளின் ஆத்மசக்தியை என்னென்று வருணிப்பது? அவரது ஆத்மசக்தி செய்துள்ள அரும்பெருஞ் செயல்களை என்னென்று எழுதுவது? அவரது ஆத்மசக்தி முஸல்மான்கள் செய்து வந்த பசுக்கொலையை நிறுத்தியது; ஹிந்துக்களைக் கிலாபத்துக்காகப் பாடுபடச் செய்தது; வீரதீர சிங்கங்களாகிய அலிசகோதரர்களைச் சாந்த மூர்த்திகளாக்கிற்று; தேசபக்த தெய்வமாகிய லாலாலஜபதிராயைச்சிறைக் கனுப்பிற்று; மோதிலால் நேருவை அரச இன்பத்தினின்றுந் துறக்கச் செய்தது; ஸி. ஆர். தாஸைச் சந்நியாசி ஆகச் செய்தது; எத்துணையோ நாத்திகர்களை ஆத்திகர்களாக மாற்றிற்று; ஹிம்சையில் மனங்கொண்டிருந்த பலரை அஹிம்சையில் திருப்பிற்று; இப்பொழுது இந்தியாவையே அவர் வழியில் நடத்துகிறது; இனி உலகமே அவர் வழி நடக்கப்போகிறது. இத்துணை ஆத்மசக்தி பெற்றுள்ள ஒருவர் வாழுமிடமோ சிறைக்களம்? அது 'நிறை'வெனும் பேரின்ப மன்றோ?

காந்தியடிகள் சிறைச்சாலை செல்லு முன்னர் தேசத்தார்க்குச் செய்த உபதேசங்கள் மற்றோரிடத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றன. நேயர்களே! அவைகளை நோக்குங்கள். அவர் என்ன போதிக்கிறார்? "தீங்கு செய்பவர்க்குந் தீங்கு செய்யாதேயுங்கள்; அவர்க்குமனமாரநன்மையே செய்யுங்கள்" என்று போதிக்கிறார். இப்போதனை செய்யும் பெரியாரைப் புத்தரெனப்போற்ற வேண்டாமா? கிறிஸ்துவென வணங்க வேண்டாமா? திருவள்ளுவரெனக் கும்பிடவேண்டாமா? எவ்வுயிர்க்குந் தீங்கு செய்யாத தருமத்தால் சுயராஜ்ஜியம் பெறக் கிளர்ச்சி செய்த ஒருவர் வதியு மிடமோ சிறைக்களமாகும்! அது குறைவிலா நிறைவாகிய ஆண்டவன் பீடமன்றோ?

உலக சரித்திரத்தை நோக்கினல் சுதந்தரத்துக்காகச் செய்யப்பட்ட போர்களின் கொடுமைகள் நடுக்குறச் செய்கின்றன. சுதந்தரத்துக்காக எத்துணையோ சண்டைக்கப்பல்கள் கட்டப்பட்டன; எத்துணையோ கோரமான ஆயுதங்கள் செய்யப்பட்டன; எத்துணையோ உயிர்கள் மாண்டன; எவ்வளவோ இரத்தவெள்ளம் ஓடிற்று. என்ன பயன் விளைந்தது? உலகத்தில் சுதந்தரம் முளைத்துவிட்டதோ? ஒருவரை யொருவர் அடக்கியாளும் முறை நிகழுமட்டும் உலகத்தில் சுதந்தரம் உதயமாகாது. சுதந்தரத்துக்கு அடிப்படையாக உள்ள சகோதரத்துவம் சமத்துவம் முதலியன வேரூன்றாமல் உண்மைச் சுதந்தரம் பரிணமியாது. நமது காந்தியடிகள் சகோதரத்துவத்தை - அஹிம்சையை - அடிப்படையாகக் கொண்டுள்ள ஒரு ஞானயுத்தத்தைத் தொடங்கியிருக்கிறார். எவ்வுயிர்க்குங் கேடுசூழாது, எல்லாக் கஷ்டங்களையும், எல்லா வருத்தங்களையும், எல்லாத் துன்பங்களையுந் தாங்களே தாங்கிப் பொறுமையால் எதிர்க்கும் யுத்தத்தைக் காந்தியடிகள் புரிகிறார். இந்த யுத்தத்தில் ஆயிரக்கணக்கான சத்தியாக்கிரகிகள் சிறைச்சாலையில் வாகைமாலை சூடி நிற்கிறார். தளகர்த்தர்கள் முகமலர்ச்சியோடு ஒத்துழையாப் போர் புரிந்து சிறை புகுந்து வெற்றிச்சின்னம் பிடிக்கிறார்கள். இப்பொழுது பெருந்தலைவராகிய காந்தியடிகளே யுத்தஞ்செய்து சிறையில் வதிகிறார். ஆதலாலெல்லாருங்காந்தியடிகள் வழிபற்றி நடந்தால் உண்மைச் சுதந்தரம் பரிணமிக்கும். ஆயுதமில்லா யுத்தம்-, அகமலர்ச்சியோடு சிறை புகுதல்-, எவ்வுயிர்க்குந் தீங்கு செய்யா அரசியல்— என்னே காந்தியடிகள் உபதேசம்! என்னே காந்தியடிகள் பெருமை! இத்தகைய மகான்-சாது-தீனதயாளன்-வாழுமிடமோ சிறைச்சாலை? கொலையிலே பிறந்து, கொலையிலே வளர்ந்து, கொலையிலே வாழும் மாக்களுக்குக் காருண்ய மூர்த்தியின் பெருமை எவ்வாறு புலப்படும்? அக்கொலைஞர்களையும் திருத்த வேண்டுவது நமது கடமையேயாகும்.

சாந்தமலை பிடிபட்டபோது "காந்தியடிகளோ சிறை புகுந்தார்; வழக்கென்னவாகுமோ?" என்று சிலர் கருதியிருக்கலாம். "அந்தோ! மனங் குழைகிறதே; கண்ணீர்பெருகுகிறதே; உடல் நடுங்குகிறதே; ஊன் அடிக்கிறதே. என்செய்வோம்!" என்று சிலர் புலம்பியிருக்கலாம். "கடவுளே எல்லாவற்றையுங் கண்டுங் காணமலிருக்கின்றாயோ? உனக்குக் கண்ணில்லையோ? காதில்லையோ? சபர்மதி ஆசிரமத்திலிருந்த உடல் சபர்மதி சிறையிலன்றோ இருக்கிறது" என்று சிலர் இரங்கியிருக்கலாம். எமக்குஞ் சயந்தன் புலம்பலும், சந்தரவதியின் புலம்பலும், சீதையின் புலம்பலும், தமயந்தி புலம்பலும் செவிகளில் கேட்கின்றன. துரியோதனன் சபையில் துரௌபதை தோன்றுகிறாள்; தருமராஜன் சாந்தத்தின் மேல் நோக்கஞ் செல்லுகிறது. கோப அலையே வீசவில்லை; எங்கணுஞ் சாந்தமே மலகியிருக்கிறது. பரதேச ஆடைகள் எரிக்கப் படுகின்றன. சுதேச ஆடைகள் உடுக்கப்படுகின்றன. மூர்க்க சக்தியே தலை காட்டவில்லை.

இரண்டு ஆண்டுகளாகக் காந்தியடிகள் செய்து வந்த உபதேசவழி வக்கீல்களும் மாணாக்கர்களும், சட்டசபைப் பிரதிநிதிகளும் நின்றிருப்பார்களாயின், சுயராஜ்யக் கமலம் எப்பொழுதோ மலர்ந்திருக்கும். காந்தியடிகளைச் சிறைக்கனுப்பினவர்கள் வக்கீல்களும் மாணக்கர்களும் சட்டசபைப் பிரதிநிதிகளுமே யாவர். அவர்கள் மனதையும் திருப்பவே காந்தியடிகள் தம்முடலை அதிகாரவர்க்கத்தார் வசம் ஒப்புவித்து விட்டார். இனியாவது அவர்கள் மனங் கரையுமா?

காந்தியடிகளே! எம்மை உய்விக்க வந்த குருநாதரே! பரோபகாரத்தின் பொருட்டுத் தொழிலை விடுத்தீர்; பொருளைத் தொலைத்தீர்; மனைவிமக்கள் மீதுள்ள பற்றை வெறுத்தீர்; எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்தும் மனங்கொண்டீர்; உணவைக்குறைத்தீர்; உப்பை ஒழித்தீர்; தருமத்தின் பொருட்டுப் பட்டினி கிடந்தீர்; உடையையும் விலக்கினீர். வெயிலும் நிலவும் உமது மேனிமேல் வீசுகின்றன. கோவண தாரியாய் விளங்குகிறீர்; சுதந்தரத்தின் பொருட்டு எல்லாவற்றையுந் துறந்தீர்; இப்பொழுது சிறையில் வதிகிறீர். ஆடைக்குப் பரதேசத்தை நோக்கிக்கொண்டிருந்த எமக்குக் கைராட்டினத்தால் சுதேச வாழ்வளித்த பெருமானே! உம்மைப்போலத்தியாக மூர்த்தியைப் பாரதமாதா எப்பொழுதாவது கண்டாளோ? காண்பாளோ? சாந்தமூர்த்தி! உமது வடிவம் எம்முடைய உள்ளத்தைக் கோயில் கொண்டிருக்கிறது. நீர் எங்கணும் விளங்குகின்றீர். விருப்பு வெறுப்பில்லா ஆண்டகையே! முப்பத்து முக்கோடி மக்களின் உடல்கள் உம்முடைய உடலாகும்; அவர்களுடைய புயங்கள் உம்முடைய புயங்களாகும். நீர் பாரத மக்களோடு கலந்திருக்கிறீர். நீர் எம்மை விட்டுப் பிரிந்ததாக எமக்குத் தோன்றவில்லை. உம்முடைய அரும்பெருங் குணம் எமக்குவேண்டும். நீர்செய்யவேண்டிய கடமையொன்றுமில்லை. உமது உபதேச வழிநிற்கவேண்டிய கடமை எம்மைப் பொறுத்து நிற்கிறது. உமது விருப்பப்படியே நடக்க முயல்வோம். திருவடிகளுக்கு வணக்கம்.

பாரதமாதாவே! உலகெலாம்போற்றுங் காந்தியடிகளை யீன்றதாயே! உன் பெருமை என்னே! அரசகளழியும்; அரண்மனைகள் அழியும்; கோட்டைகளழியும்; சேனைகள் அழியும், காந்தியை யீன்ற உன் புகழ் அழியுமோ? மற்ற மாதரசிகள் பட்டாடைகள் தாங்கி, இரத்தினபரணங்கள் அணிந்து, களித்து இறுமாந்து, அரியாசனத்தில் வீற்றிருக்கிறார்கள். எமது அருமை அன்னாய்! நீயோ கதருடைதரித்துச் சிறையில் இருக்கிறாய். இயற்கை அரியாசனம் உனக்கிருக்கிறது. பரதேச உடைகளை யணியாது நிர்வாணமாக இருந்த நீ இப்பொழுது அரையில் மாத்திரம் கதருடை அணிந்திருக்கிறாய்; முன்னை வாழ்வை உனக்களிக்க உன் புதல்வர்கள் முயன்று வருகிறார்கள் அவர்கட்கருள் செய். வந்தேமாதரம்.

## லஜபதி

ஐந்து நதியாயும் அழகிய நாடளித்த அருமைப் புதல்வராகிய லாலா லஜபதிராய் இரண்டுவருடங் காவல் பெற்றார். ஒரு வருடம் கடுங்காவல்; மற்றொரு வருடம் வெறுங்காவல். முன்னையதை முன்னால் அனுபவிக்க வேண்டும்; பின்னையதைப் பின்னால் அநுபவிக்க வேண்டும். நமது லஜபதி திலகர் பெருமானைப் போன்ற தேசபக்தர். திலகர் பெருமான் எவ்வாறு பன்முறை அதிகார வர்க்கத்தவரால் அலைக்கப்பட்டாரோ, அவ்வாறே லஜபதியும் அவரால் அலைக்கப்படுகின்றார். பன்னிரண்டாண்டுகளுக்கு முன்னர் லஜபதிராய் தேசப்பிரஷ்டஞ் செய்யப்பட்டார்; பின்னை ஏறக்குறைய ஆறுண்டு பிரிட்டிஷ் இராஜ்ஜியத்தை மிதியாது அமெரிக்காவில் வாழ்ந்தார். அமெரிக்காவினின்றும் புறப்படும்போது "அதிகார வர்க்கத்துக்கு விரைவில் இரையாவேன்" என்றஎண்ணத்தோடு புறப்பட்டதாக லஜபதி கூறியிருக்கிறார்.

லஜபதிராய் சமுதாய ஊழியத்தின் பொருட்டுத் தம்மிடத்திருந்த பொருள் எல்லா வற்றையும் ஒழித்தார். கல்வி வளர்ச்சிக்காக லாலா லஜபதிராய் செய்த தியாகம் அளவிடற்பாலதன்று. தயானந்த சரஸ்வதி கண்ட ஆரிய சமாஜத்துக்கு உயிரளித்து அதை ஓங்கச் செய்த பெருமை லஜபதிராய்க்கே செல்லும். அரசியல் ஞானத்திலும் சமயஞானத்திலும் லாலா லஜபதிராய்சிறந்தவர். லஜபதிக்குக் கீழ்நாடுந்தெரியும்; மேல்நாடுந்தெரியும். லஜபதிராய்க்குமுதலில்விதிக்கப்பட்ட தண்டனை நியாயமற்றதென்று அவரை அதிகார வர்க்கத்தார் விடுதலை செய்தனர். லஜபதிராய் சிறைவாயிலைக் கடந்தாரோ கடக்கவில்லையோ மீண்டும் அதிகாரவர்க்கத்தார் அவரைப் பிடித்து விசாரித்துச் சிறை செய்தனர். இப்பொழுது லஜபதி சிறையில் கடுங்காவல்பெற்றிருக்கிறார். இந்தியாவிலுள்ள தேசபக்தர் பலருள் அஞ்சாநெஞ்சினர் லஜபதிராய் என்று சொல்வது மிகையாகாது. எந்தத் தண்டனைக்கும் லாலா லஜபதிராய் அஞ்சமாட்டார்; சுதந்தரத்தின் பொருட்டு எவ்வித துன்பத்தையும் இன்பத்தோடு ஏற்றுக்கொள்வார். பாஞ்சால தெய்வமாகிய லாலா லஜபதிராய் காந்தியடிகள் முன்னரே சிறைக்கோட்டஞ் சென்றார். தியாகமூர்த்தி வாழுமிடம் சிறையிடமாகா தென்று நாம் கூறுவோம்.

லஜபதி! உமது சிறை சிறிது மனதைக் கலங்கவேசெய்கிறது; என்றுங் கஷ்டத்தையே அநுபவித்துவருகிறீர்; ஒத்துழையா வழிநின்றே சிறைபுகுந்தீர். உமது கஷ்டம் தேசத்தில் மின்சாரம் போல் பாவி ஆங்காங்குள்ள தேசபக்தர்களைத்தட்டி எழுப்புகிறது. நீர் வெளியிலிருந்தால் பார்தோலி தீர்மானம் வேறு விதமாக முடிந்திருக்கும். உமதருகே இமயம் நிற்கிறது; உம்மைச்சூழச் சிந்து பாய்கிறது. காற்றும்நீரும் உமக்குத்துணை செய்யும், ஆண்டவன் உம்மைக் கைவிடமாட்டான்.

சகோதரர்களே! சகோதரிகளே! காந்தியடிகள் சிறையில்வதிகிறார். லஜபதி ஈராண்டு காவல்பெற்றார். ஏனைய தலைவர்களும் காப்பிலிருக்கிறார்கள். நீங்களென்ன செய்யப் போகிறீர்கள்? அதிகாரப் பேய்களுக்கு இரையாகப் போகிறீர்களா? தேசநலத்தை நாடப் போகிறீர்களா? நீங்கள் ஒரே தொண்டு செய்தல் வேண்டும். அத்தொண்டு கதர் உடை தரிப்பதேயாகும். காந்தியடிகள் கதர் தொண்டு ஒன்றையே செய்யுமாறு கேட்கிறார். அத்தொண்டை ஒழுங்குபெறச் செய்யுங்கள். அத்தொண்டால் சுயராஜ்ஜியம் மலரும். தலைவர்கள் தங்கள் கடனைச் செய்துவிட்டார்கள். உங்கள் கடமையை நீங்கள் செய்யுங்கள். நீங்கள் தேசத்தை மறந்து உலக இன்பத்தில் களியாட் டயர்வீர்களாயின் உங்களுக்குச் சாபமுண்டாகும்.

மாணக்கர்களே! வக்கீல்களே!! எல்லாருஞ் சிறைபுகுந்தார்களே; இப்பொழுதாவது தேசத்தின் மீது உங்கள் கவலைசெல்ல வில்லையோ? அடிமைக்கல்வியும் பொருளீட்டலும் சுதந்தரத்தை நல்குமோ? கல்வியுள்ள நீங்கள் வாளாகிடக்கலாமா? பாரத மாதா உங்கள் முகம் நோக்குகிறாள்; அழைக்கிறாள். அவள்சேவை செய்ய வாருங்கள். வந்தேமாதரம்.

## "காந்தியும் அராஜகமும்"

"காந்தியும் அராஜகமும்" என்பது ஒரு நூலின் பெயர். அதை எழுதினவர் ஸர். சங்கரன் நாயர் என்பவர். அதன் விலை இரண்டரை ரூபாயாம். அந்நூலின் பெயரே மாறுகோலைக் காட்டுகிறது. அஹிம்சையை உலகத்துக்குப் போதிக்கப்போந்த குருநாதராகிய காந்தியடிகளிடத்தாதல், அவர் செயலினிடத்தாதல் அராஜகத்தோற்றமே நிகழ்வதற் கிடமில்லை.

காந்தியடிகள் இராஜத் துரோகக் குற்றஞ் சாட்டப்பட்டுச் சிறையில் வதியும் இவ்வேளையில் இப்புத்தகம் வெளிவந்தது ஒரு நாடகமாகவே யிருக்கிறது. ஸர். சங்கரன் நாயர் கிழவயதில் வேறு சிறந்த வேலைகளைச் செய்யாது, இந்தியமக்கள் - அஹிம்சையை விரும்பும் உலகத்தவர் - மனதைப் புண்படுத்தத்தக்க ஒரு சிறுமை நூலை எழுதிவெளியிட்டதற்குப் பெரிதும் வருந்துகிறோம். ஸர். சங்கரன் நாயர் ஏதோ ஒன்றைக் குறிக்கொண்டு இந்நூலை வரைந்திருக்க வேண்டுமென்று ஊகிக்கிறோம்.

ஸர். சங்கரன் நாயர் உத்தியோகத்துக்காகக் காங்கரஸ் உழைத்துவந்த காலத்தில், காங்கரஸில் வட்டமிட்டு, ஒரு முறை அக்கிராசனமும் வகித்திருக்கிறார். அக்காலத்திய காங்கரஸ் மேடை உத்தியோக விளம்பரமேடையாக விருந்தது நேயர்கட்குத் தெரியும். அக்காலத்தில் இங்கிலீஷ் படித்தகூட்டத்தார் உயர்பதவிகளைக் கருத்துட்கொண்டு காங்கரஸ் மேடையில் நாவன்மை காட்டுவது வழக்கம். அக்காலத்திய காங்கரஸ் மனிதராக இருந்தவர் ஸர். சங்கரன் நாயர். பின்னை அவர் வாழ்நாள் உத்தியோகத்திலேயே கழிந்தது. ஸர். சங்கரன் நாயர் நீதிபதியாயிருந்ததும்; இந்திய நிருவாகசபையில் அங்கத்தவராயிருந்ததும் அன்பர்கட்குத் தெரியும். ஸர். சங்கரன் நாயர் பொதுக் காரியங்களில் அரிய தொண்டு செய்திருப்பதாக எமக்குத் தெரியவில்லை. எமது தேசதருமத்தை-ஆசாரத்தை-ஞானத்தை-அழிக்க ஒருவித ஆசாரசீர்திருத்த முறையைக் கட்டி அழுது கொண்டிருந்தார். அதனையும் அவர் அரிய காரியம் செய்தவராகத் தோன்றவில்லை. ஸர். சங்கரன் நாயருக்கு எப்பொழுதும் நமது தேசத்தாசாரத்தில் காய்வு உண்டு. மேல்நாட்டையே மேல் நாடாக்க வேண்டு மென்பது அவர் கொள்கை என்று பலவழியிலும் ஊகிக்கலாம்.

ஸர் சங்கரன் நாயர் உத்தியோகச் சேற்றில் செளிந்து கொண்டிருந்தமையால், அவரைச் சிறந்த தேசபக்தர் என்று சொல்ல முடியாது. ஸர். சங்கரன் நாயரை உத்தியோக தேசபக்தர் - பட்ட தேசபக்தர் என்று நாம் ஒதுக்குவோமேயன்றித்தேசத்தின் மீது இடைவறாத அன்பு கொண்டுழைத்த திலகர், லஜபதி, காந்தி முதலியோர் குழுவில் இவரைச்சேர்த்துக் கணிக்கமாட்டோம். ஸர். சங்கரன்நாயர்இப்பொழுதுஏதோ ஒருகருத்துக்கொண்டு திருவிளையாடல் புரிகிறார்; "காந்தியும் அராஜகமும்" என்னும் புத்தகத்தை எழுதினர். இப்புத்தகத்தால் இவர் எண்ணிய கோரிக்கை ஈடேறினும், பாரதமாதாவின் வயிற்றில் பிறந்த ஒருமகன் செய்ய வேண்டிய கடமையைச் செய்தவராகார்.

ஸர் சங்கரன் நாயர் பஞ்சாப் படுகொலைக்கு நியாயம் பிறவாமைகண்டு இந்திய அரசாங்க நிருவாகக் கூட்டத்தினின்றும் விலகினர். விலகிய இவர் தேசத்தொண்டில் தலைப்பட்டிருத்தல் வேண்டும். தேசத்தொண்டில் அறிவைச் செலுத்தாது, இந்தியமந்திரி சபையில் அறிவைச் செலுத்தினர். அதனல் பஞ்சாப் படுகொலை காரணமாக இந்திய அரசாங்க நிருவாக அங்க பதவியினின்றும் விலகிய பயனைப்பெறு திழந்தனர். பின்னர் ஒரு சுதேச சமஸ்தானத்தில் ஒரு பதவி பெற்றுக்காலங்கழித்து வரும்போது, பம்பாயில் கூடிய ஒரு மகாநாட்டில் தலைமை வகிக்கும் பேறு பெற்றார். ஆங்கே ஒரு சார்பாக நடந்து எழுந்தோடி வந்து "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகையில் ஆவேசமாகக் காந்தியடிகள் செயலைப்பற்றி எழுதினர். லார்ட் செம்ஸ்பர்ட் கவர்ன்மெண்ட் ஒத்துழையா இயக்கம் வளர்ந்து வருவதைப் பார்த்துக்கொண்டு வந்தது தவறு என்றும், பஞ்சாப் படுகொலைக்கு இனி என்ன செய்வதென்றும், ஸர். சங்கரன்நாயர் எழுதினர். எந்தக் கவர்ன்மெண்டில் இவர் அதிருப்தி கொண்டு எக்காரணம்பற்றி அதினின்றும் விலகினரோ, அதையே இப்பொழுது ஆதரிப்பதை நோக்குமிடத்து ஸர். சங்கரன் நாயருக்கு மூளைபிறழ்ந்திருக்க வேண்டும் அல்லது உத்தியோகப்பாசம் மீண்டும் பிணித்திருக்க வேண்டும் என்பது புலனாகும். ஸர். சங்கரன் நாயர் அறியாமையைப்பற்றி ஸர். சார்லஸ் எட் பார்லிமெண்டில் குறிப்பிட்டுப் பேசியது வருமாறு:—

> இந்தியாவில் ஒரு புரட்சிக்காரர் இருக்கிறார். அவர் பெயர் ஸர். சங்கரன் நாயர். அவர் மூன்று நான்கு வருடம் இராஜப்பிரதிநிதி நிருவாகசபையில் அங்கத்தவராயிருந்தார். அவர்பஞ்சாப்பிலெழுந்த குழப்பத்தை அரசாங்கத்தார் அடக்கியமுறையைஆதரிக்கமனங்கொள்ளாது அச்சபையினின்றும் விலகினர். இம்மனிதர் உற்றவேளையில் தமது அரசாங்கத்தினின்றும் விலகினர்; பெரிய வீரராக இந்தியா முழுவதும் போற்றப்பட்டார். அவருக்குப் பூமாலைகள் சூட்டப்பட்டன. இமயம் முதல் கன்னியா குமரி வரை "அரசாங்கத்தினின்றும் விலகினர்" என்று போற்றப்பட்டார். இந்தியா மந்திரி என்னசெய்தார்? விலகினதும் அவரை (சங்கரன் நாயரை) இந்தியா மந்திரி சபையில் சேர்த்துக்கொண்டார். அவர் இந்தியாவுக்குத் திரும்பிச்சென்றார். அங்கே பம்பாயில் காந்தி சம்பந்தப்பட்ட ஒரு மகாநாட்டில் தலைமை வகித்து; 'காந்தியோடு கலந்து சமாதானங் கொண்டுவர முடியாது' என்று விலகி, பத்திரிகையில் நீண்ட வியாசம் எழுதினர். அதில் அவர் "காந்தி இயக்கத்தை இவ்வளவு தூரம்வளரச்செய்வித்தது லார்ட் செம்ஸ்பர்ட் கவர்ன்மெண்டின் பலஈனமேயாகும். அப்பலஈனச்செயலையே தற்போதுள்ள அரசாங்கமுங்கொண்டிருக்கிறது" என்று அவ்வியாசத்தில் குறிப்பிட்டார். பஞ்சாப் குழப்பத்தை மிகக் கொடுமையாக அரசாங்கத்தார் அடக்கினர்களென்று அதினின்றும் விலகிய இம்மனிதர் லார்ட் செம்ஸ்பர்ட்டையும், தற்போதைய இராஜப் பிரதிநிதியையும் பலஈனர் என்று கூவுகிறார். அவர் அங்கத்தவராயிருந்தபோது தவறுதலானபலஈனம் காணப்படவில்லை; இப்பொழுது நேர் விரோதமாகக் காணப்படுகிறது!

ஸர். சங்கரன்நாயர் ஸர். சார்லஸ்எட்டின் வாசகங்களைக்கண்டிருப்பார் பார்லிமெண்டிலும் இங்கிலாந்திலும் தாமிழந்த செல்வாக்கை மீண்டும் உயிர்ப்பிக்க ஸர் சங்கரன் நாயர் இவ்வபாச நூலை எழுதி வெளியிட்டார்போலும்! ஸர் சங்கரன் நாயர் பஞ்சாப் படுகொலைக்காக விலகிய நேர்மையையும், இப்பொழுது இப்புத்தகத்தை வெளியிட்ட நேர்மையையும் உற்று நோக்கி ஆராய்வோருக்கு உண்மைச் சங்கரன் நாயர் உதயமாவார். ஸர். சங்கரன் நாயர் லார்ட் ரெடிங்கிக்குப் பின்னால் தாம் இராஜப்பிரதிநிதியாக முயல்கிறார் போலும்!

ஸர். சங்கரன் நாயர் காந்தியடிகளின் அருள் உபதேசத்தை அறிந்துகொள்ள மூன்றுபிறவி எடுக்கவேண்டும். எல்லாவற்றையுந் துறந்து ஒற்றைத்துணி பணித்தலவும் அன்பரது செவ்விய நெறி, வெயில் படாதவாறு மேல் நாட்டு நாகரிக இன்பத்தை நுகர்ந்து வரும் ஸர். சங்கரன் நாயருக்கு எளிதில் புலனாகுமோ?

ஸர் சங்கரன் நாயரே! உமது உபதேசத்தைக் கேட்டு மகிழும் இந்தியா போய்விட்டது; இப்பொழுது அரிச்சந்திரன்இந்தியா அரும்புகிறது. காந்தியடிகள்போல் தியாகஞ்செய்து அரசுமேறும். அப்பொழுது உமது மொழியை ஆராய்வோம். தியாகமின்றி, உழைப்பின்றி, மூடஞானத்தால் உளறுவதைத் தேச மேற்றுக் கொள்ளாது.

"காந்தியும் அராஜகமும்" என்ற நூலை எழுதியதைப் பார்க்கிலும் "காந்தியும் அமைதியும்" என்ற ஒரு நூலை எழுதலாகாதா? அராஜகத்தில் உமது அறிவுசென்றமை குறித்து இரங்குகிறோம்.

## இடியேறு

### தாய் மொழி

காந்தியடிகள் மனைவியாரைக் கூர்ஜரத்தில் தாய் என்றே அழைப்பது வழக்கம். தமிழ் நாட்டவராகிய நாமும் அங்ஙனமே அம்மையாரை அழைத்தல் வேண்டும். போலீஸ் அதிகாரி காந்தியடிகளை மோட்டாரில் சிறைக்கு அழைத்துக்கொண்டு போகையில் நமது தாயாரும் உடன் சென்று ஆசிரமத்துக்குத் திரும்பிய போது, அம்மையாரைப் பலர் சூழ்ந்து நின்றாராம். அவர்களைப் பார்த்து "ஜனங்கள் மாத்திரம் சாந்தமாயிருந்தால் எல்லாம் நல்லனவாகவே முடியும்," என்று கூறினாராம். இத்தாய்மொழியைப் பாதுகாக்க வேண்டுவது நமது கடமை.

### தமிழ்நாடு காங்கரஸ் கூட்டம்

நமக்கு அவசியமென்று தோன்றியவாறே தமிழ்நாடு காங்கரஸ் பொதுக்கூட்டமும், நிருவாகக் கூட்டமும் சென்னையில் இம்மாதம் இருபத்தைந்தாந்தேதி கூடுமென்று தமிழ்நாடு காங்கரஸ் கூட்டக் காரியதரிசி வாயிலாக அறிந்து மகிழ் வெய்துகிறோம். பலவித நிலைமைகளை நோக்கியே தமிழ்நாடு காங்கரஸ் கூட்டம் சென்னையில் கூட்டவேண்டுமென்று நாம் கூறினோம். இடம் காலம்விஷயம் முதலியன பின்னர்த் தெரிவிக்கப்படும். இக்கூட்டத்தின் அவசியத்தை உணரும் தேசபக்தர்கள் விஜயம் எதிர்பார்க்கப்படுகிறது.

### ஒரு தொழிலாளியின் உறுதி

சென்றவாரம் ஸ்ரீ நடேசநாயகர் என்னும் தொழிலாளி ஒருவர் மீது ஜாமீன் வழக்குத் தொடுக்கப்பட்டிருந்ததென்றுகுறிப்பிட்டோம். அவரோடு ஸ்ரீ சக்கரவர்த்தி ஐயங்கார் மீதும் அவ்வழக்கு தொடரப்பட்டிருந்தது. தொழிலாளி ஒத்துழையா வழிநின்று எதிர்வாதஞ் செய்யாது, ஈராண்டு வெறுங்காவல் தண்டனை பெற்றார். ஸ்ரீ ஐயங்கார் மன்னிப்புக் கேட்டு வீடு சேர்ந்தார். ஸ்ரீ நடேச நாயகர் நீண்டகாலமாக வாயால்காங்கரஸ்தொண்டு செய்து வந்ததற்கேற்ப இப்பொழுது செய்கையில் அவரது மனோநிலையைக் காட்டிவிட்டார். இத்தகைய உறுதியாளரே வேண்டற்பாலர்.

### மௌலானா ஹஜரத் மோகினி அபிப்பிராயம்

தேசத்தில் சில பத்திரிகைகளில், காங்கரஸ் கட்சியில் பிளவு ஏற்பட்டிருப்பதாகவும், அப்பிளவுக்குக் காரணர் மௌலானா ஹஜரத் மோகினியென்றும், மகாத்மாவோடு அவர் மாறுபடுகிறார் என்றுஞ் சொல்லப்பட்டன. மௌலானா ஹஜரத் மோகினி இப்பொழுது தமது அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கிறார். மௌலானா அவர்கள் "பார்தோலி தீர்மானத்தால் காந்தியடிகள் செல்வாக்கிழந்தனர் என்று சொல்லப்படுவது முற்றிலும் பொய். மஹாத்மாவின் உத்தம குணங்களை யறிந்தவர் எவரும் அவரைக் குறைகூறமாட்டார். விவாதங்களில் அபிப்பிராய பேதம் வருதல் இயல்பு. அதனால் மஹாத்மாவைப் பின்பற்றுதொழிவது அறியாமையே யாகும். என்மீது சிலர் வீண் புரளிகளைக்கட்டிவிடுகின்றனர். ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையே எனது லட்சியம். அதற்காகவே நான் உழைத்து வருகிறேன். மஹாத்மாவின் கட்

டளைப்படி தொண்டு செய்ய வேண்டுவது நமது கடமை'' என்று கூறி யிருக்கிறார். உண்மையுணராத சில பொய்யர்கள் வீண் புரளிகளைக் கட்டித் தேசத்தைப் பாழ்படுத்துகிறார்கள். மௌலானா ஹஜரத் மோகினி காங்கரஸ் தீர்மானத்துக்கிணங்கியே நிற்கிறார், காங்கரஸில் எவ்வித பிளவுமில்லை.

## ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகள்

இப்பத்திரிகைகள் காந்தியடிகளைப் பிடிக்கவேண்டுமென்று ஓயாமல் கூச்சலிட்டுக் கொண்டிருந்தன. இப்பொழுது காந்தியடிகள் பிடிபட்டார். இனி எவர்மீது பாணப் பிரயோகஞ் செய்ய அப்பத்திரிகைகள் நினைந்து கொண்டிருக்கின்றனவோ தெரியவில்லை. முக்கால் பாகக்கலகத்துக்குக் காரணம் ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகளின் கூச்சலேயாகும். உண்மை இந்தியர்கள் இவ்வுண்மை கண்டு நடப்பார்களாக.

## மன்னிப்பு

ஸர் வாட்ஸன்ஸ்மித் என்பவர் இந்தியர்களை இழித்துரைத்ததைப் பற்றிச் சென்ற வாரம் எழுதினோம். அவர் இந்தியர்களைப் புண்படுத்தும் சிறுமை உரைகளைத்திரும்ப வாங்கிக்கொண்டு மன்னிப்புக் கேட்டுக்கொண்டாராம். இதைக்குறித்து நாம் மகிழ்வெய்துகிறோம்.

## ஸ்ரீமாண்டேகு

ஸ்ரீமாண்டேகு இந்தியா மந்திரி பதவியினின்றும் விலகிவிட்டார். காரணம் துருக்கி சம்பந்தமான கட்டைவெளியிட மந்திரிசபைக்குத் தெரிவியாது இந்தியாகவர்ன்மெண்டுக்கு அநுமதி கொடுத்ததே என்று சொல்லப்படுகிறது. ஸ்ரீமாண்டேகு தமதுசெயலை ஆதரித்தே பேசுகிறார். அவர் மந்திரி சபையின் ஊழல்களை வெளியிடுகிறார். இந்தியர்களிற் சிலர் ஸ்ரீமாண்டேகு மந்திரி சபையினின்றும் விலகினதைக் குறித்து வருந்துகிறார். எவர் இந்தியா மந்திரியாக வந்தாலென்ன? போனாலென்ன? முன்னே லார்ட் மார்லியை மிதவாதிகள் கொண்டாடினார்கள். அவர் காலத்தில்தான் அச்சுச்சட்டம் பதன்செய்யப்பட்டது. திலகர் ஆறுவருடத் தண்டனையடைந்ததும் அவர் காலத்திலே தான். ஸ்ரீமாண்டேகுவை இந்திரன் சந்திரன் என்றும் மிதவாதிகள் கொண்டாடுகிறார்கள். ஸ்ரீமாண்டேகு காலத்தில் உபயோகமற்ற சீர்திருத்தம் ஒன்று முளைத்தது; ரௌலட்சட்டம் நிறைவேறாமல் போனதோ? அச்சட்டம் ஒன்றுஞ் செய்யா தொழியினும், அதன் தோற்றங் காரணமாகவே பஞ்சாப் படுகொலை நடந்தது. ஸர் மைக்கல், டையர் முதலியோர் செயல்களுக்கெல்லாம் மாண்டேகு ஆதரவளித்துக் கொண்டிருந்தார். தொழிலாளர் இயக்கம் அவர் காலத்திலேயே இந்தியாவில் தோன்றிற்று. தொழிலாளர் நலத்துக்காக ஸ்ரீமாண்டேகு என்ன செய்துவிட்டார்? ஒன்றுஞ் செய்யவில்லை. இப்பொழுது இந்தியாவில் விளையாடும் அடக்குமுறையை ஒடுக்க ஸ்ரீமாண்டேகு மனங்கொள்ளவில்லை. அடக்குமுறை என்றுஞ் சொல்ல அவர் மனமெழவில்லை. முடிவாகக் காந்தியடிகளைப் பிடிப்பதற்கும் உடன்பாடாகவே யிருந்தனர் என்று தெரியவருகிறது. காந்தியடிகள் பிடிபடும் போது அவர் மந்திரி பதவியிலில்லாமலிருந்தது அவர் செய்த புண்ணியமாகும். ஆதலால் தேசபக்தர்கள் எந்த மந்திரி மீதுங் கவலை செலுத்த வேண்டுவதில்லை; காங்கரஸ் தொண்டுசெய்வதில் கண்ணுங் கருத்துமாயிருப்பார்களாக.

## பிரசங்கமா?

காந்தியடிகள்பிடிபட்டதைப்பற்றிப்பண்டித மதன்மோகன் மாளவியா பிரசங்கஞ்செய்தாராம்! அரசாங்கத்தார் செய்தது குற்றம் என்று தீர்மானஞ் சொன்னாராம். இவ்வளவில் பண்டிதர் தங்கடனை ஆற்றிவிட்டதாக நினைத்தல் கூடாது. பண்டித மாளவியா காந்தியடிகள் பீடத்திலமர்ந்து பணிசெய்ய முன்வரல் வேண்டும். அவர் '' சமாதானம்'' என்று வெளிக்கிளம்பிய நாள்தொட்டு ஒத்துழையா இயக்கம் ஒடுங்கிவருகிறது. காந்தியடிகளும் பிடிப்பட்டார். இதைக்குறித்துத் தேசமுழுவதும் பண்டிதமாளவியா மீது ஒருவித சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. அதை நிவர்த்தி செய்ய வேண்டுவது மாளவியாவின் இன்றியமையாக் கடமை.

## படந்தவிர வேறென் தெரியும்?

பிரதம மந்திரியாகிய ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் பார்லிமெண்டில் இந்தியாவைப் பற்றிப் பேசியதைக் கர்னல் வெஜ்வுட் ''டேயிலி ஹெரால்ட்'' என்னும் பத்திரிகையில் கண்டித்தெழுதியபோது ''மிஸ்டர் லாயிட் ஜார்ஜுக்கு இந்தியாவின் படந்தவிர வேறென்றுந் தெரியாது'' என்று குறிப்பிடுகிறார். இந்தியாவைப்பற்றி ஒன்றுந்தெரியாத ஒருவர் பிரதம மந்திரி பீடத்திலமர்ந்திருந்தால் என்ன நலன் விளையும்?

# மகாத்மாகாந்தி பிடிபட்டார்

''எங் இந்தியாவிலும்'' நவஜீவன்பத்திரிகையிலும் எழுதிய சில வியாசங்களுக்காக மோஹன்தாஸ் கரம்சந்தாகாந்தி இம்மாதம் பத்தாந் தேதியில் இந்தியன் பீனல் கோட் 124 ஏ. பிரிவுபடி இந்தியா அரசாங்கத்தின் அதிகாரத்தைக்கொண்டு பம்பாய் அரசாங்கத்தினரால் ஆமதாபாத்தில் பிடிக்கப்பட்டார். மகாத்மாவுடன் கூட ஷங்கர்லால் பாங்கரும் பிடிக்கப்பட்டார். இவர்களின் வழக்கு ஆமதாபாத்தில் ஸ்ரீமான் ப்ரௌன் என்ற மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் 11-ந்தேதியில் ஆரம்பமாயது. மகாத்மாகாந்தியும் ஷங்கர்லால் பாங்கரும் சாட்சிகளைக் குறுக்குவிசாரணை செய்யவில்லை. இவர்களின்மீது 124-வது ஏ. பிரிவுபடி குற்றஞ்சாட்டப்பட்டு இவர்கள் விசாரணைக்காக செஷன்ஸுக்குக் கமிட்டு செய்யப்பட்டார்கள். செஷன்ஸ் விசாரணை 18-ந்தேதியில் நடைபெறும்.

### காங்கிரஸ் காரியக்கமிட்டி

காங்கிரஸின் காரியக்கமிட்டியார் இம்மாதம் 17-ந்தேதியில் ஆமதாபாத்திலுள்ள சபர்மதி ஆசிரமத்தில் கூடுவார்கள். காங்கிரஸ் கமிட்டியினர் என்ன வேலை செய்ய உத்தேசித்திருக்கின்றனர் என்ற கேள்விக்கு ஸ்ரீமான் படேல் பார்தோலியில் நிறைவேற்றப்பட்டு டில்லியில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியினரால் அங்கீகரிக்கப்பட்ட நிர்மாண வேலைகளை நடத்திக்கொண்டு போகப் போவதாகக் கூறினர்.

### 'நவஜீவன்' அச்சுக்கூடம் பரிசோதிக்கப்பட்டது

மகாத்மா பிடிக்கப்பட்ட அன்றிரவிலேயே'நவஜீவன்' அச்சுக்கூடம்போலீசாரால் பரிசோதிக்கப்பட்டு அங்கே மகாத்மா காந்தியால் 'எங் இந்தியா' 'நவஜீவன்' ஆகிய இவ்விரு பத்திரிகைகளுக்கும் 1921 1922-ம் ஆண்டுகளில் எழுதிய வியாசங்களின்நகல்கள்எடுத்துச் செல்லப்பட்டன.

சனிக்கிழமையில் மகாத்மாவும், ஷங்கர்லால் பாங்கரும் பேட்டி காணப்பட்டனர். அப்போது மகாத்மாதம் தேச மக்களுக்கு விடுத்த செய்தி, ''கதர்'' என்பதேயாம்.அது பலாத்காரமின்மையையும் இந்து முஸ்லிம் ஒற்றுமையையும், தாழ்ந்த வகுப்பினரை முன்னேற்றச் செய்யக்கூடியதென்று மகாத்மா கூறி, நாம் மிதவாதிகளுடன் நேசமாய் இருக்கவேண்டுமென்றும்கூடியசீக்கிரத்தில்அவர்கள்நம்மிடம்சேர்ந்துவிடுவார்களென்றும் கூறினர்.

### சிறையினின்று மகாத்மா விடுத்த செய்தி

சனிக்கிழமையில் ஸ்ரீமதி சரோஜனி தேவி மகாத்மாவைச் சிறைச்சாலையில் பேட்டி கண்டார். அப்போது அவர் தேச மக்களுக்கு விடுத்த செய்தி வருமாறு:—

காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசிகளில் ஒருவரையும் என்னையும் அரசாங்கத்தார் கைதிசெய்துவிட்டதற்காக பம்பாய் வாசிகள் துக்கப்படாமல் சந்தோஷத்துடன் இருக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். ஒத்துழையா இயக்கத்தின் எல்லா அங்கங்களையும் பூர்த்தி செய்துவைக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். பம்பாய் வாசிகள் சர்க்கா விஷயமாகவும் கதர் விஷயமாகவும் தங்கள் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும். இந்தியாவெங்கணும் கைத்தறியிலும் கைராட்டினங்களிலும் நெய்யப்படும் துணிகளை பம்பாயிலிருக்கப்பட்ட தனவந்தர்கள் வாங்கியுடுத்திக்கொள்ளக் கூடுமென்று அவர்களுக்கு நான் ஆலோசனை கூறுகிறேன். பம்பாய் ஸ்திரீகள் தங்கள் கடமைகளை உண்மையில் செய்வதாயிருந்தால் தேசத்தின்நன்மைக்காகத் தினந்தோறும் சிறிது நேரம் வரை நூல் நூற்கவேண்டும். எங்களுடன் கூட ஜெயிலுக்குவர யாரும் இஷ்டப்படாமல் இருக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். முழு பலாத்காரமற்ற நிலைமை ஏற்படும் வரையிலும் ஜெயிலுக்கு வர இஷ்டப்படுவது பெருங்குற்றமாகும். ஆங்கிலேயர்களுக்கும் மிதவாதிகளுக்கும் ஆயாசமில்லாமல் செய்துவிடுவதுதான் மேற்கூறியதற்குத் தகுந்த பரீட்சையாகும். நமக்குள் இருக்கும் அபிப்ராய பேதங்களைப் பாராட்டாதுஅவர்களிடத்தில்சிநேகபாவம்காட்டினல்தான் மேற்கூறிய நிலைமை ஏற்படும்.

### ஜெயிலிலும் கோர்ட்டிலும் மதிப்புடன் நடத்தப்பட்டார்

ஸ்ரீமதி சரோஜனி தேவியை பம்பாயில் பேட்டிகண்டு சம்பாஷித்த காலையில் அவர் பின்வருமாறு கூறினர்:—

மகாத்மா சந்தோஷமாகவும் நிம்மதியுடனும் இருந்துவருகிறார். ஜெயிலிலும் விசாரணையின்போதும் அவருக்கு மிகுந்த மரியாதையும், மதிப்பும் காட்டப்பட்டன. மகாத்மா, பாங்கர் ஆகிய இவ்விருவர்களின் உபயோகத்திற்கெனப் பிரத்தியேகமான இடம் ஒதுக்கிவைக்கப் பட்டிருக்கிறது. அவ்விடம் மிகப்பரிசுத்தமாக வைக்கப்பட்டிருக்கிறது. வேண்டிய சௌகரியங்களெல்லாம் செய்து கொடுக்கப்பட்டிருக்கின்றன. மகாத்மாவுக்காகக் கதரால் ஆக்கப்பட்ட தலையணை ஒன்று கொடுக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீமான் பாங்கரும் சௌக்கியமாய் இருந்துவருகிறார். தீர்ப்பு 18-ந் தேதியில் சொல்லிவிடப்படும்.

### இன்னொரு பேட்டி

திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஆமதாபாத் மில்கள் கொடுத்த மூன்று லட்ச ரூபாயை எப்படி செலவிடுவது என்ற விஷயமாக ஒருவர் மகாத்மாவை 14-ந் தேதியில் கண்டு பேசினர். மாகாண காங்கிரஸ் கமிட்டி எவ்வளவு தொகை கொடுக்கவேண்டுமென்று கூறுகிறதோ அத்தொகையை ஆமதாபாத் மில்களினின்று கிடைத்த தொகையை நிர்வகிக்க நியமிக்கப்பட்ட கமிட்டியார் தொழிலாளர்களுக்கென ஆமதாபாத்தில் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி நடத்துவதற்காக ஆமதாபாத் தொழிலாளர் சங்கங்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று கூறினர்.

### பொதுச் சட்டமறுப்பு வேண்டாம்

அரசாங்கத்தார் அடக்குமுறைகளை எவ்வளவு கடுமையாகப் பிரயோகித்து வந்தாலும் ஜனங்கள் பொதுவாக சாத்வீக சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்கக் கூடாதென்று கூறினர்.

### அலி சகோதரர்கள்

அலி சகோதரர்களைப்பற்றி இந்திய சட்டசபையில் சர் வில்லியம் வின்சன்ட் கூறியதைப்பற்றிக் கூறுகையில் அலி சகோதரர்கள் தாங்கள் உண்மையென்று நினைப்பவைகளை ஒளிக்காமல் வெளியிட்டார்களென்றும் அதை அரசாங்கத்தார் பெருந்தவறாகக் கருதுகின்றனரென்றும் மகாத்மா காந்தி கூறினர்.

### ஸ்ரீ மாண்டேகுவின் இராஜிநாமா

ஸ்ரீமான் மாண்டேகு இந்தியா மந்திரி பதவியை இராஜிநாமா செய்து விட்டதனல் ஒருவிதமான பாதகமும் ஏற்படாதென்றும், தாம் செய்த காரியங்களுக்காக அன்னருக்கு மதிப்பு கொடுக்கவேண்டுமென்றும் மகாத்மா கூறினர்.

### பாரிஸ் மகாநாடு

சமீபத்தில் கூடப்போகும் பாரிஸ் மகாநாட்டில் அதிக நன்மை ஏற்பட்டுவிடாதென்றுங் கூறி, ஆமதாபாத் ஜனங்கள் கதர் உற்பத்தியில் மூழ்கியிருக்க வேண்டுமென்றும், ஐக்கியமாய் இருக்க வேண்டு மென்றும் ஒத்துழையாமையை ஆதரிக்க வேண்டுமென்றும் கூறினர்.

### அஸிஸ்டண்ட் கலெக்டர் இராஜிநாமா

மகாத்மா காந்தி பிடிக்கப்பட்டதைக் கண்டிக்கும் முகத்தான் சூரத் ஜில்லா உதவி கலெக்டர் ஸ்ரீ எச். பி. சிவதாஸனி தமதுபதவியை இராஜிநாமா செய்து விட்டதாகத் தெரிகிறது.



### பதினேழாம் ஆண்டு விழா

சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் பதினேழாம் ஆண்டு நிறைவு விழா, டி பேட்டை மோபிரீஸ் இராஜ வீதியிலுள்ள ''குகாநந்த நிலைய''த்தில் கீழ்க்கண்டவாறு கொண்டாடப் பெறும்.

(18-3-22) சனிக்கிழமை மாலை 5-30 மணிக்கு, மஹாமஹோபாத்தியாயர்- பிரம்மஸ்ரீ- உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் தலைமைவகிக்க,தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான்- மகாதேவ முதலியார் அவர்களும் சித்தாந்த ரத்னகரம் ஸ்ரீமான்-கா. ஆலால சுந்தரம் பிள்ளை அவர்களும் முறையே ''வள்ளி நாயகியார் திருமண நுட்பம்'' ''சைவர் கடமை'' என்பவைகளைக் குறித்துப் பேசுவார்கள்.

(19-3-22) ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 3-மணிக்கு அத்தியாச்சிரம சுத்தாத்துவித வைதிக சைவசித்தாந்த ஞானபானு ஸ்ரீமத்- பாம்பன்- குமரகுருதாச சுவாமிகள் தலைமை வீற்றிருக்க ஸ்ரீமான்- க. சதாசிவ செட்டியார் B. A. அவர்களும் ஸ்ரீமான்- கே. சுப்பிரமணிய பிள்ளை M. A. M. L. அவர்களும் முறையே ''சுப்பிரமணியம்'' ''சித்தாந்த வரலாறு'' என்பன வற்றைப்பற்றிப் பேசுவார்கள்.

### ஸ்ரீமான் மாசிலாமணி பிள்ளை

ஆத்துக்குடி ஸ்ரீமான் மாசிலாமணி பிள்ளை சாத்தூர் தாலுக்காவின் எல்லைக்குள் இரண்டு மாதங்கள்வரை உபந்யாசம் செய்யக்கூடாதென்று 144-வது பிரிவுபடி சாத்தூர் தாலுக்கா மாஜிஸ்ட்ரேட் உத்தரவு பிறப்பித்துள்ளாரென்றும் இராமநாதபுரம் ஜில்லா காங்கிரஸ் சபையைச் சேர்ந்த உதவிகாரியதரிசி சாத்தூர் தாலுக்காவுக்குள் பொதுக்கூட்டங்களைக் கூட்டக்கூடாதென்று தடுக்கப்பட்டிருக்கிறாரென்றும் ஒரு நிருபர் தந்திமூலமாய் அறிவிக்கிறார்.







# ஸ்ரீமான் மாண்டேகுவின் இராஜிநாமா

## காரணம் என்னே?

ஸ்ரீமான் மாண்டேகு லிபரல் கட்சியைச் சேர்ந்தவர். இந்தியா மந்திரியாக வருவதற்கு முன்னமே அவர் பார்லிமெண்டில் இந்தியாவுக்காக அதிகமாகப் பாடுபட்டிருக்கிறார். 1917-ம் ஆண்டின் மத்தியில் இவர் இந்தியாவின் மந்திரியாக நியமிக்கப்பட்டார். அதே வருட ஆகஸ்ட் மாதத்தில் இந்தியாவுக்குச் சீர்திருத்தங்கள் வழங்கப்பட வேண்டிய அவசியத்தைப் பற்றி ஓர் அறிக்கையைக் காமன்ஸ் சபையில் வெளியிட்டார். அவரது பெரு முயற்சியாலேதான் 1919-ம் வருட சீர்திருத்த சட்டம் பிறந்தது. 1917-ம் ஆண்டு முதற்கொண்டு இதுவரை இந்தியா மந்திரி பதவியை வகித்துத் திறமையாகக் காரியங்களை நடத்திவந்தார்.

இந்தியா அரசாங்கத்தார் பிப்ரவரி 28-ந் தேதியிட்டு அனுப்பிய அறிக்கையைப் பிரசுரித்த காரணமாக இவர் இராஜிநாமா செய்ய நேர்ந்தது. ஸ்ரீமான் மாண்டேகு தாமாகவே மற்ற மந்திரிகளின் யோசனையைக்கேளாமல் வெளிநாடுகளையும் பொறுத்த ஒரு விஷயத்தைச் சொந்தப் பொறுப்பில் பிரசுரம் செய்தமைக்காக அன்னர் தம்பதவியை இராஜிநாமா செய்து விடவேண்டுமென்று பிரதம மந்திரியார் கூறியதற்கிணங்க ஸ்ரீமான் மாண்டேகு தம்பதவியை இராஜிநாமா செய்துவிட்டார் என்று செய்திகள் கிடைக்கின்றன. ஆனல் ஸ்ரீமான் மாண்டேகு கேம்பிரிட்ஜ் என்ற இடத்தில் செய்த உபந்யாசத்தினல் பல புதிய விஷயங்கள் வெளிவந்திருக்கின்றன. அங்கே அவர் செய்த உபந்யாசம் வருமாறு:—

### தடுக்கக் காலமிருந்தது

இந்தியா அரசாங்கத்தாரின் தந்தியை மார்ச் 3-ந் தேதியில் மந்திரி சபையினருக்கு அனுப்பினேன். இவ்விஷயத்தை மார்ச் 4-ந் தேதியில் பிரசுரிக்க இந்தியா அரசாங்கத்தாருக்கு உத்தரவு கொடுத்துவிட்டதாகவும் மந்திரி சபைக் கூட்டத்தின் போது லார்டு கர்ஸனுக்குத் தெரிவித்தேன். லார்டு கர்ஸன் அப்போதே இவ்விஷயத்தைப் பிரசுரிக்கக் கூடாதென்று சொல்லியிருக்கலாம். அதைப் பிரசுரிக்காமல் தடுத்துவிடுவதற்குப் போதுமான அவகாசமும் இருந்து வந்தது. அப்போது லார்டு கர்ஸன் சும்மா இருந்துவிட்டு மாலையில் என்மீது குற்றஞ் சுமத்தி ஒரு கடிதம் எழுதினர். அக்கடிதத்தில் இவ்விஷயத்தைப் பற்றி மந்திரி சபையில் வாதிக்கக் கூடாதென்றும் இனிமேல் இம்மாதிரியான அறிக்கைகளைத் தன் உத்தரவு இல்லாமல் பிரசுரிக்கக் கூடாதென்றும் அதில் கூறியிருந்தார்.

### விஷம புத்தியுள்ள பிரதம மந்திரியார்

இந்த அறிக்கையைப் பிரசுரம் செய்யலாமா என்ற மந்திரி சபையில் வாதிக்க வேண்டுமென்று நான் கருதவில்லை. இது மந்திரியின் சொந்தப்பொறுப்பைப் பொறுத்ததாகும். என்மீது துவேஷங் கூறுவதானது மந்திரி சபையின் பொதுப் படையான பொறுப்புக்கு விரோதமான முறையாகும். புத்திசாலியாய் இருந்தபோதிலும் விஷம புத்தி அதிகம் படைத்த பிரதம மந்திரியார் என் மீது இதற்காகக் குற்றங்காண்பது நியாயமாகாது. உலக நன்மைக்காகவும் கிரேட் பிரிட்டனின் நன்மைக்காகவும் தாம் அதிகமாகப் பாடுபடுவதாக அன்னர் விளம்பரப்படுத்திக்கொள்கிறார். ஆனல் மந்திரி சபையினருக்குப் பொதுவாக உள்ள பொறுப்பைவிட்டுக் கொடுத்தே இவர் தம் காரியங்களை நிறைவேற்றிக்கொண்டு போகிறார். எகிப்தைப் பற்றி லார்டு மில்னர் வெளியிட்ட அறிக்கையும், கெட்டிஸ் என்பார் கடற்படை சம்பந்தமாகச் செய்த சிபார்சுகளைப் பற்றி லார்டு அமெரி வெளியிட்ட அறிக்கையும், கென்யா விஷயமாக ஸ்ரீமான் சர்ச்சில் பேசியதும் மந்திரி சபையினரின் பொறுப்புக்கு மாறுபட்டதாகாதா? அயல்நாட்டு விஷயங்கள் சம்பந்தமாக அக்கியநாட்டு மந்திரிக்கும் பிரதம மந்திரிக்கும் இருந்துவரும் சம்பந்தா சம்பந்தங்களை ஐரோப்பா நன்கறியும்.

### இந்தியாவின் உரிமை

சமாதான மகாநாட்டில் இந்தியாவுக்குப் பிரதிநிதித்வம் கொடுக்கப் பட்டிருக்கிறமையாலும், இன்னும் இந்தியாவுக்குக் குடியேற்ற நாடுகளுக்குக் கொடுக்கப் பட்டிருக்கும் சுதந்தரம் கொடுக்கப் பட்டுள்ளமையாலும், சமாதானத்திற்கு இன்றியமையாதது எது என்பதை எடுத்துக்கூற இந்தியாவுக்கு உரிமையுண்டு.

### பிடிவாதக் காரர்களின் செயல்

இப்போது அரசாங்கத்தின் நிலை கேவலமான ஸ்திதியில் இருந்து வருகிறது. ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் மறுபடியும் தாம் ஆதிக்கம் பெறுவதற்காகவும், கன்சர்வேடிவ்கள் என்று சொல்லப்படும் பிடிவாதக்காரர்களின் உதவியைப் பெறுவதற்காகவும் என்னை மந்திரி சபையினின்று இராஜிநாமா செய்துவிடும் படியாய்க் கூறிவிட்டார்.

### 'இந்தியமக்களை நம்புகிறேன்'

நான் இந்தியமக்களை நம்புகிறேன். இந்தியா சம்பந்தமாகக் கையாண்ட முறை சரியானதே யாகும். இந்தியாமுன்னேற்றம் அடைவதற்கு அதுதான் சரியான முறையாகும். நான் கையாண்டமுறை வெற்றியடைந்தே தீரும். இந்தியா அரசாங்கத்தார் அறிக்கையை வெளியிட்டதைப்பற்றி மந்திரிசபையில் பேசவேண்டிய அவசியமேயில்லை.

### மந்திரி சபையில் நடந்ததென்னே?

மந்திரி சபையின் கூட்டமொன்று திடீரென மார்ச் 6-ந் தேதியில் நடைபெற்றது. அக்கூட்டத்திற்கு ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் வரவில்லை. தங்களுடைய அறிக்கையைப் பிரசுரிக்க வேண்டுமென்று இந்தியா அரசாங்கத்தினரிடமிருந்து வந்த தந்தி ஒவ்வொரு மந்திரியிடத்திலும் அப்போது இருந்திருக்க வேண்டும். அவ்விஷயத்தைப்பற்றி வாதிக்க ஓர் அங்கத்தினராவது விரும்பினதாகத் தெரியவில்லை. லார்டு கர்ஸன் ஒருவரே இவ்விஷயத்தைப் பற்றி என்னிடத்தில் பிரஸ்தாபித்தார். இந்தியா அரசாங்கத்தின் அறிக்கையைப் பிரசுரிக்க நான் அநுமதி கொடுத்திருப்பதாக மந்திரி சபை நடந்து கொண்டிருக்கும்போதே அந்தரங்கமாக லார்டு கர்ஸனிடம் கூறினேன். லார்டு கர்ஸன் மௌனமாய் இருந்துவிட்டபடியால் நான் இவ்விஷயத்தைப் பற்றி மந்திரி சபையில் பிரஸ்தாபிக்கவில்லை. இவ்விஷயத்தைப் பற்றி அவர்களுடன் ஆலோசிக்க வேண்டுமென்று அப்போதும் நினைக்கவில்லை. இப்போதும் நினைக்கவில்லை.

### இந்தியா அரசாங்கத்தாரின் உரிமை

நானும் ஆகாகானும் பிரதம மந்திரியாரும் எடுத்துக் கூறாத விஷயங்கள் ஒன்றும் இந்தியா அரசாங்கத்தின் தந்தியில் காணப்படவில்லை. ஆகவே இந்தியா அரசாங்கத்தார் அனுப்பியதை ஏன் பிரசுரிக்கக்கூடாது? இந்தியா அரசாங்கத்தார் சேவர்ஸ் உடன்படிக்கையில் சம்பந்தப் பட்டிருக்கிறார்கள். சேவர்ஸ் உடன்படிக்கையினல் சாந்தம் ஏற்படாதென்று நான் நினைத்ததைப்போல் இந்தியா அரசாங்கத்தாருக்கு அநுபவத்தில் தெரிந்ததும் அவர்கள் அதைத்திருத்த வேண்டுமென்று என்னைக்கேட்டுக் கொண்டார்கள். இம்மாதிரியான ஓர் ஏற்பாடு தங்கள் உள்நாட்டு அமைதிக்குப்பாதகத்தை புண்டாக்கக் கூடியதாயிருந்தால் கானடா தென்னாப்பிரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய தேச அரசாங்கங்கள் சும்மா இருக்குமா?

### மூடுமந்திரத்தில் நம்பிக்கையில்லை

மத்தியகிழக்குத் தேசங்கள் சம்பந்தமாக அரசாங்கத்தார் அநுஷ்டித்துக் கொண்டுவரும் அயல்நாட்டுக் கொள்கை இந்தியாவில் கவலைக்கிடமான நிலைமையுண்டாக்கியிருக்கிறது. ஸேவர்ஸ் உடன்படிக்கை பிரதம மந்திரியார் கொடுத்த வாக்குறுதிக்கு விரோதமாக இருக்கிறதென்றறிந்து அதைத்திருத்த வேண்டுமென்று இந்தியா அரசாங்கத்தார் இடைவிடாது வற்புறுத்தி வருகின்றனர். மூடுமந்திரமான வேலைகளில் எனக்கு ஒருக்காலும் நம்பிக்கைகிடையாது. தங்கள் சார்பாக இந்தியா அரசாங்கத்தினர் என்ன செய்துகொண்டு வருகின்றனர் என்பதைத் தெரிந்து கொள்ள இந்தியமுஸ்லிம்களுக்குஉரிமை இருக்கிறது. இம்முக்கிய விஷயமாக அரசாங்கத்தார் என்ன நினைத்திருக்கின்றனர் என்பதை அறிந்து கொள்ளவும் பிரிட்டிஷ் மக்களுக்கு உரிமை இருக்கின்றது. முதல் தந்திகிடைத்ததும் அதைப் பிரசுரிக்க நான் அநுமதி கொடுத்து விடவில்லை. நான் இதைப்பற்றி யோசித்துக் கொண்டிருக்கையில் இந்தியாவின் நன்மையை மதித்து நான் உடனே பதில் அனுப்பவேண்டு மென்று 4-ந்தேதியில் இந்தியா அரசாங்கத்தாரிட மிருந்து அவசரத் தந்தியொன்று வந்தது.

### 'லார்டுரெடிங் குழந்தையல்ல'

லார்டுரெடிங் இராஜீய விஷயங்களில் அநுபவமற்றவரல்லர். இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடியான நிலைமையை மிகக் கஷ்டத்துடன் அவர் சமாளித்துக்

கொண்டு வருகிருர். அவர் இரண்டு தடவைகளில் அறிக்கையைப் பிரசுரம் செய்ய அநுமதி கொடுக்க வேண்டுமென்று கேட்டார். ஆகவே நான் இராஜப்பிரதிநிதியாரின் வேண்டுகோளுக்கு இணங்க வேண்டிய தாயிற்று. அவர்களுடைய அறிக்கையை வெளியிடும்படி நான் அனுப்பிய தந்தியை பிரிட்டிஷ் அரசாங்கத்தார் பிரசுரித்திருந்தால், வேறு பல விஷயங்களையும் கவனிக்க வேண்டியிருந்ததை நான் நன்ருய் அறிந்திருந்தேன் என்பதை உலகத்தினர் அறியக்கூடும். இந்தியத் துருப்புகளின் உதவியைக் கொண்டே நாம் துருக்கியைத் தோற்கடித்திருக்கிருேமாகையால் இந்தியர்கள் கூறுவதற்கு மதிப்பு வைத்து நடக்க வேண்டும். புண்ணிய க்ஷேத்திரங்கள் யாருடைய பாதுகாவலில் இருக்கவேண்டுமென்ற விஷயமாக நேசதேசத்தினர் தலையிடவேண்டியதில்லையென்றும் இவ்விஷயம் சம்பந்தமாக ஹெட்ஜாஸ் அரசரும், மெசபதோமியா அரசரும், துருக்கி சுல்தானும் அவர்களுக்குள் ஒருவித முடிவுக்கு வரவேண்டுமென்று கூறியிருந்தேனென்றும் நான் இந்தியா அரசாங்கத்தாருக்கு அனுப்பிய தந்தியை வெளியிட்டால் தெரியவரும். அத்தகைய ஏற்பாடுகளைச் செய்து கொள்ள த்டையாக ஒன்றும் உடன்படிக்கையில் காணப்பட் டிருக்கவில்லையென்று ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜே இந்திய முஸல்மான்களுக்கு எடுத்துக்கூறியுள்ளார்.

### இந்தியாவின் பாத்தியதை

லார்டு கர்ஸன் அந்நியநாடுகள் சம்பந்தமாக அநுஷ்டித்துக்கொண்டு போகும் முறைகளுக்கு இந்தியாவின் வேண்டுகோள்கள் பாதகமாய் இருக்கிறது என்று கருதி, அதனால் இந்தியாவில் ஏற்படக்கூடிய விபரீதபலனை அறிந்துகொள்ளாமல் அவர் இருப்பதற்காக நான் வருந்துகிறேன். இந்தியாவுக்கு நியாயம் பிறக்குமென்ற என்னால் இயன்ற அளவு முயற்சி செய்து இதுவரை பொறுமையுடன் காத்துக் கொண்டிருந்தேன். பன்முறை இராஜிநாமா கொடுத்து விடலாமென்று நான் யோசித்ததுண்டு. இந்திய முஸ்லிம்களுக்குக் கொடுத்துள்ள வாக்குறுதிகளை நிறைவேற்றி வைக்கப்போவ தில்லையென்று அவர்களுக்கு அறிவிக்க நான் இஷ்டப்படாததால் இதுவரையில் தயங்கி இருந்தேன்.

### இந்திய முஸ்லிம்களுக்கு ஒருவார்த்தை

பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தங்களுடைய வேண்டுகோள்களை நிறைவேற்ற மாட்டார்களென்று இந்திய முஸ்லிம்கள் கருதிவிடக்கூடாது. இன்னமும் முஸ்லிம்கள் தங்களுக்குச் சாதகம் ஏற்படுமென்ற எண்ண இடமிருக்கின்றது. இந்திய முஸ்லிம்கள் பொறுமையுடனிருக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

### கிரேக்கரிடத்தில் பிரதம மந்திரியின் அநுதாபம்

கீழ்த்தேசங்கள் விஷயமாகத் தாம் அநுஷ்டித்துவரும் முறையை மாற்றிக் கொள்ள வேண்டுமென்று நான் பிரதம மந்திரியாருக்கு நயமாகவும் பயமாகவும் எடுத்துக் கூறியிருக்கிறேன். சமாதான மகாநாடு ஆரம்பமானது முதல் பிரதம மந்திரியார் கிரீஸ்விஷயமாக அநுதாபங்கள் காட்டிவருவதை நான் அறிந்துகொள்ளக் கூடவில்லை. அதனால் கிரேக்கர்களுக்கும் நன்மையில்லை. மற்றவர்களுக்கும் நன்மையில்லை. இம்மாதிரியாய் அநுதாபங்காட்டுவது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்குக் கெடுதலாகுமென்று நான் கருதுகிறேன்.

### பிடிவாதக்காரர்களின் வெறுப்பு

நான் இராஜிநாமா செய்துவிட்டதற்குக் காரணம் தற்கால இராஜீய நிலைமையேயாகும். கன்சர் வேடிவ்கட்சியைச் சேர்ந்த பிடிவாதக்காரர்கள் என்னை வெறுத்தார்கள். சென்ற மாதம் 14-ந்தேதியில் காமன்ஸ் சபையில் இந்தியாவைப் பற்றி வாதம் நடந்தகாலையிலுங்கூட ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் என்னை ஆதரித்து ஒரு வார்த்தையும் சொல்லாமல் அவர்களை ஆதரித்துப் பேசியிருப்பது கவனிக்கத்தக்கது.

### வெறிகொண்ட மாஜிகவர்னர்கள்

இந்திய விஷயங்களில் இராஜதந்திரத்தை அநுஷ்டிக்கும் சக்திகிடையாதென்பதைப் பிடிவாதக்காரர்கள் காட்டிக்கொண்டார்கள். அவர்களுக்குச் சாதகமாக இந்தியாவில் சம்பந்தப்பட்ட பிற்போக்காளர்களும் திறமையாக ஆளாததனால் அகௌரவம் அடைந்த மாஜி கவர்னர்களும் சேர்ந்திருக்கிருர்கள். இந்தியா அரசாங்கத்தை நான் ஆதரித்து வரவில்லையென்றும் இந்தியா அரசாங்கத்தார் சட்டத்தையும் அமைதியையும் நிலை நிறுத்துவதை நான் இங்கிருந்துகொண்டு தடை செய்து வருகிறேனென்றும் கதைகளைக் கட்டிவிட்டு இந்தியாவில் அமைதியின்மையை ஏற்படுத்தினர்கள்.

### நண்பர்களுக்கு வேண்டுகோள்

நான் இந்தியா அரசாங்கத்தாரை எவ்வளவு தூரம் ஆதரித்தேன் என்பதை எனக்குப் பின்னால் வருபவர் அறிந்து கொள்வர். பிரிட்டிஷ் ஜனங்கள் இந்திய மக்களிடையில் அநுதாபங்காட்டி வருகிருர்களென்றுநான்என் இந்தியநண்பர்களுக்குத் குத்தெரிவித்துக் கொள்கிறேன். இந்தியா விஷயத்தில் தடமாட்ட மில்லாதிருக்கும்படி அரசாங்கத்தாரை பிரிட்டிஷ் மக்கள் வற்புறுத்த வேண்டுமென்று நான் வேண்டிக்கொள்கிறேன்.

நான் இந்தியா மந்திரி பதவியை விட்டுவிடுவதால் இந்தியா விஷயமாகக் கொள்கையில் ஒருவிதமாறுதலும் ஏற்படாதென்று நான் நினைக்கிறேன். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொள்கையில் மாறுதல் ஏற்படாமலிருப்பதற்காகவேநான் இராஜிநாமா செய்தேன்.

'நியூ இந்தியா'

---

### கார்காத்த வேளாளர் இரண்டாவது கூட்டம்

நிகழும் துன்மதி ஆண்டு பங்குனி திங்கள் ஆரும் நாள் (19-3-22) காலை ஏழு மணிக்கு குளித்தலைக் கடம்பர்கோவில் சந்நிதானத்தில் ஷை கூட்டம் கூடும். ஆண்டு, ஸ்ரீமான் முசிரி. வெ. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமை வகிப்பார்கள். அக்குலாபிமானிகளனைவரும் வருமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது என்று ஒரு நிருபர் எழுதுகிருர்.





## இழுப்பு

மகாத்மாகாந்தி எழுதுவது :—

உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களான உப்பு ஆகிய இவைகளின் மீது வரியை இரண்டு மடங்குக்குயர்த்தியதைப் பற்றி ஏன் இவ்வளவு பலத்த கிளர்ச்சி நடைபெற்று வருகிறது. இராணுவச் செலவு அறுபத்திரண்டு கோடி ரூபாய்களுக்கு உயர்த்தப்பட்டதற்கு ஒருவித பதிலும் அரசாங்கத்தார் சொல்லாமல் இருப்பதைக்கண்டு ஜனங்கள் ஆச்சரிய முறுகின்றனர். தேசத்தில் உணர்ச்சி அதிகப்பட்டுக்கொண்டு போவதற்குத் தக்கபடி இராணுவச் செலவும் அதிகமாகிக் கொண்டு போகவேண்டும். இந்தியாவின் பாதுகாப்புக்காக இராணுவம் வைக்கப்பட்டிருக்கவில்லை. இங்கிலீஷ் முதலாளிகளை இந்தியாவில் வைத்திருப்பதற்காகவே இராணுவம் வைக்கப்பட்டிருக்கிறது. இது சுத்த உண்மையாகும். இதை ஸ்ரீமான் மாண்டேகு வெளிப்படையாக எடுத்துக்கூறியுள்ளார். இதையே விலகிச் செல்லவிருக்கும் வங்காள வர்த்தக சபை அக்கிராசனரும், பம்பாய்க் கவர்னரும் கூறியிருக்கிருர்கள். அவர்கள் நம் நிபந்தனைப்படி நம்முடன் காரியங்களை நடத்த இஷ்டங்கொள்ளாமல் அவர்களுடைய நிபந்தனைகளின்படி காரியங்களை நடத்த இருக்கிருர்கள். சீர்திருத்தங்கள்நம்மை அமுக்கி வைத்திருக்கின்றன. சீர்திருத்தங்களில் அதிகமான ஊழல்கள் இருந்து வருகின்றன. அதில் இரத்தத்தையே உறிஞ்சும்படியான உப்புவரியும் சம்பந்தப்பட்டிருப்பது ஒன்று.

'நீங்கள் இஷ்டப்படினும் படாவிட்டாலும் இந்தியாவைவிட்டு விடமாட்டோம்' என்று சொல்லப்படுகிறது. இவையெல்லாம் நம்முடைய நன்மைக்கே ஆகுமென்றுநாம்நினைக்கிறேம். பிரிட்டிஷாரின் ஆயுதபல மில்லாவிட்டால் நாம் ஒருவருக்கொருவர் சச்சரவுசெய்து கொள்ளாமல் இருக்கமாட்டோமென்று நம்புகிறேம். நம் சகோதரர்கள் கையால் இறக்க நாம் பயப்படுவதால், அடிமைகளைப்போல இருக்கவேண்டியதா யிருக்கிறது. போலிக் கௌன்சில்கள் மூலமாய் இராணுவ ஆட்சி முறையை நடத்துவதைக் காட்டிலும், இராணுவ அதிகாரிஒருவரால் வெளிப்படையாக நாம் ஆளப்படுவது ஆயிரமடங்கு மேலானதாகும். இம்மாதிரியான கௌன்சில்கள் ஜனங்களின் கஷ்டத்தை அதிகப்படுத்துவதல்லாமல் செலவையும் அதிகப்படுத்துகின்றன. நாம் வாழவேண்டுமென்று கருதினல் உண்மையைச் சொல்லி வாழ்வது, கொஞ்சம் கொஞ்சமாய்ச் சுதந்தரம் பெற்று வருகிறேம் என்று சொல்லி வாழ்வதைக் காட்டிலும் எவ்வளவோ கௌரவமானது. சுதந்தரம் சிறிது சிறிதாய் வருவதென்பது கிடையாது. சுதந்தரம் ஜனிப்பை யொத்தது. பூர்ணமாய்ச் சுதந்தரம் அடையும் வரையிலும் நாம் அடிமைகளேயாவோம். ஜனனம் ஒரு நிமிட நேரத்தில் நிகழ்ந்தேறிவிடுகிறது.

இனி வரப்போகும் சுயேச்சையைக்கண்டு நடுங்குவதற்குச் சமானமாக நமது காங்கிரஸைக்கண்டு நடுங்குகிருர்கள். காங்கிரஸ் உண்மையான காங்கிரஸாய்ப் போய்விட்டபடியால் அவர்களுடைய மனதில் ஒருவித பயத்தை யுண்டாக்கி விட்டது. ஆகையால் காங்கிரஸை எப்படியாவது ஒழிக்க வேண்டுமென்று கருதுகிருர்கள், இதுதான் அவர்களது எண்ணம். ஜனங்களின் மனதில் பயத்தை யுண்டுபண்ணக் கூடிய காரியங்களைச் செய்தால் இன்னும் நூறு வருடங்கள்வரை, இந்தியாவின் பொருள்களை எடுத்துக்கொண்டு செல்லலாமென்று நினைக்கின்றனர், அதுவரை இந்தியா இருக்குமா? இந்தியர் ஈக்களைப்போல் மடிந்துவிட மாட்டார்களா? என்று அவர்கள் ஏன் நினைக்கவேண்டும். தேங்காயைத் தின்னும்போது அதனிடத்தில் பட்சம்காட்டிச் சாப்பிடுவது கூடாதகாரியமாகும். சாப்பிட்டான பின் அதன் ஓட்டை எறிந்து விடுகிறேம். அதேமாதிரியாய் வியாபாரிகளும் வாங்கிச் சாப்பிடுவோரை நசுக்கிவிட வகைதேடுவார்கள். எவ்வெவ்வழிகளில் சுரண்டலாம் என்பதே வியாபாரிகளுக்கு வழக்கம்.

சட்டசபை அங்கத்தினர்கள் தங்கள்படிச் செலவு முதலியவற்றிற்காகவும், மந்திரிகள் தங்கள் சம்பளத்துக்காகவும், வக்கீல்கள் தங்கள் வருவாயிக்காகவும், வியாஜ்யம் தொடுக்கிறவர்கள் டிக்ரிபெறுவதற்காகவும், பெற்றோர்கள் ஜீவனேபாயத்திற்கு வேண்டிய சோற்பப்படிப்பு தங்கள் பிள்ளைகளுக்குக் கிடைக்கவேண்டு மென்பதற்காகவும், தனவந்தர்கள் தங்கள் செல்வத்தை இன்னுமதிகமாகப் பெருக்குவதற்காகவும், இஷ்டப்படுகிருர்கள். ஏதோ மயக்கத்தில் கூத்தாடுவதைப் போலவே இவ்வெண்ணங்களெல்லாம் இருந்து வருகின்றன, இறக்குந் தறுவாயிலிருக்கும் ஒரு நோயாளியின் இருதயம் எப்படித் துடிக்குமோ அதுபோன்ற மயக்கத்தினல் கூத்தாடுவதற்கு இவைகளையெல்லாம் ஒப்பிட வேண்டும், இந்தக் கூத்து அடிமுடியும் வரையில் செலவுகள் வளர்ந்து கொண்டு தான்போகும். ஒத்துழையாக்காரர்களை இந்த அபரிமிதச் செலவுக்கும் பொறுப்புக்கும் ஆளாகச்சொன்னலும் எனக்கு அவ்விஷயம் ஆச்சரியமாகத் தோன்றவேமாட்டாது. எச்சந்தர்ப்பத்திலும் பொறுமையுடன் அதைச் சகித்திக்கொண்டிருப்பதே புத்திசாலித்தனமாகும். அஹிம்சையைக் கொண்டு அரசாங்கத்தாரின் ஹிம்சையை நாம் ஒழித்துவிடக்கூடும். அரசாங்கத்தாரைவிட அதிக செலவு செய்யவும் நாம் தயாராய் இருக்க வேண்டும். சுயேச்சையை மறந்து இல்லாத ஒரு சுகத்தை நாடக்கூடாது. அஹிம்சையே விடுதலைக்கு ஒப்பற்ற வழி. பலவந்தத்தின் காரணமாய் அடிமைகள் அனுஷ்டிக்கும் அஹிம்சை தர்மமாகாது. மஹா தைரிய புருஷர்களும் விடுதலையடைந்தவர்களும் மனப்பூர்த்தியாய் அநுஷ்டிக்கக் கூடிய அஹிம்சா தர்மத்தையே இங்கு நான் குறிப்பிடுகிறேன்.

'எங் இந்தியா'

## கிழக்காப்பிரிக்காவில் இந்தியர்களின் நிலை

(ஸ்ரீமான் சி. எப். ஆண்ட்ரூஸ் எழுதுவது)

பலாட்டியரான ஜாதியினர் நிர்வாக விஷயங்களில் அதிகமான செல்வாக்கு பெற்றிருக்கையில் அன்னுர் தங்கள் கீழ் இருக்கும் ஜாதியினரை (Subject race) எங்ஙனம் நடத்துகின்றனர் என்பது கீழ்வரும் விஷயங்களால் தெரிய வரும். முதலில் கென்யா குடியேற்ற நாட்டைப்பற்றிக் கவனிப்போம். அறிஞர் சிம்ப்சன் என்பார் 1913-ம் ஆண்டில் கென்யாவின் சுகாதார விஷயத்தைப்பற்றி ஓர் அறிக்கை வெளியிட்டார். அவ்வறிக்கை ஐரோப்பியர்களல்லாத பிற ஜாதியினருக்கு அதிகமான பாதகத்தை விளைவிக்கக்கூடியதாயிருக்கிறது. அவ்வறிக்கை வெளியானதிலிருந்து கிழக்காப்பிரிக்காவைச் சேர்ந்த ஐரோப்பியர்கள், அதில் கண்டிருக்கிறபடி காரியங்களை அரசாங்கத்தார்நடத்தவேண்டுமென்று கூறி வந்திருக்கின்றனர்.

வெள்ளையரல்லாத பிற நிறத்தினரைத் தனியாய் வைக்கவேண்டுமென்று அவ்வறிக்கையில் கூறப்பட்டிருந்ததை, அமுலுக்குக் கொண்டுவந்தால் தாங்கள் எதிர்க்காமல் எதிர்க்கும் முறையைக் கையாள நேரிடுமென்று இந்தியர்கள் கூறவே, அரசாங்கத்தார் அதை அமுலுக்குக் கொண்டுவராமல் நிறுத்தி விட்டனர்.

இத்தனை ஆண்டுகளாகியும் அவ்வறிக்கையில் கண்டிருக்கும் முறைகளை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்ற எண்ணத்தை உத்தியோகஸ்தர்கள் இன்னும் கொண்டுள்ளார்கள். வெள்ளையரல்லாத பிற நிறத்தினர் தாங்கள் எதிர்க்காமல் எதிர்க்கும் உபாயத்தைக் கையாளப் போவதாகக் கூறியிராவிட்டால் அவர்களை அரசாங்கத்தார் எப்போதோ அவ்வறிக்கையில் கண்டிருக்கிறபடி அப்புறப்படுத்தி யிருப்பர்.

கென்யா குடியேற்ற நாட்டிற்குத் தலை நகராய் இருக்கும் நெய்ரோபி, கடல் மட்டத்திற்கு ஆறுயிரம் அடி உயரத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் தான் புதிய அரசாங்கச் சாலைகள் இருந்து வருகின்றன. தற்போது செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடுகள் அமுலுக்கு வந்தால் கிழக்காப்பிரிக்க யூனியனின் தலைமை ஸ்தானமாயும் இஃது போய் விடும். கிழக்காப்பிரிக்கா யூனியனில் கென்யா, உகந்தா, தாங்கநியாகா ஆகிய இப்பிரதேசங்களும் நையாசலாந்துபிரதேசமும் சேர்ந்துவிடலாம். சுகாதார சௌக்கியத்தை முன்னிட்டு இந்தியர்களின் இருப்பிடங்களுக்கும் ஐரோப்பியர்களின் இருப்பிடங்களுக்கும் இடையில் 300 கஜ அகலமுள்ள காலிநிலம் விட்டு வைக்கப்படவேண்டுமென்று அறிஞர் சிம்ப்சன் தம் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

நான் இவ்வியாசத்தை எழுதும்போது மலபார் கஷ்ட நிவாரண வேலையில் ஈடுபட்டிருந்தேன். வருத்தத்தைக் கொடுக்கக் கூடியதும் மனிதத் தன்மைக்கு ஒவ்வாததுமான காரியம் ஒன்று மலையாளத்தில் நடைபெற்று வருகிறது. அது தீண்டாமை என்பதாகும். மேலான ஜாதியைச் சேர்ந்தவர்களைக் கண்டால் கீழான ஜாதிகள் இவ்வளவு தூரம் ஒதுங்கி நிற்க வேண்டுமென்ற நியதி அங்கு இருந்து வருகிறது. அறிஞர் சிம்ப்சன் செய்திருக்கும் ஏற்பாடு அமுலுக்குக் கொண்டுவரப்பட்டால் மலையாளத்தில் இருக்கிறதைப் போலவே இவ்விடத்திலும் விஷயமிருக்கும். மேட்டுப்பாங்கான பூமிகளை யெல்லாம் ஐரோப்பியர்கள் தங்கள் வாசஸ்தலத்திற்காக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அறிஞர் சிம்ப்சன் ஆசியாக்காரர்களின் வியாபாரஸ்தலங்களும் தனியாய் இருக்கவேண்டுமென்றும் ஐரோப்பியர்களின் வியாபாரஸ்தலங்கள் இருக்குமிடங்களில் இருக்கக் கூடாதென்றும் கூறுகிறார்.

இதைப் போலவே மலையாளத்திலிருக்கும் நம்பூதிரிகளும் நாயர்களும் சுகாதார விஷயங்களை முன்னிட்டு தீயர்களையும் புலையர்களையும் ஒதுக்கி வைக்க வேண்டியது அவசியமென்று கூறி வருகிறார்கள்.

மொம்பாசா ஆப்ரிக்காவின் கிழக்குப் பாகத்தில் இருக்கும் சிறந்த ஒரு துறைமுகப் பட்டினமாகும். அறிஞர் சிம்ப்சனின் ஏற்பாட்டிற் கடற்புறமாய் இருக்கப்பட்ட நிலங்கள் யாவும் ஐரோப்பியர்களின் வாசஸ்தலத்திற்காகவும் வியாபாரத்திற்காகவும் இருக்கவேண்டுமென்று ஏற்படுகிறது. கடற்புறத்திற்குப் பின்னல் இருக்கப்பட்ட சாதாரணமான நிலங்களில் ஆசியாக்காரர்களும் ஆப்ரிக்கர்களும் வசிக்கவேண்டுமோம். இதை இரண்டுவருடங்களுக்குமுன் குடியேற்ற நாட்டுக் காரியதரிசியாயிருந்த மில்னர் ஒப்புக்கொண்டு அதற்கான ஏற்பாடுகளையும் செய்யஆரம்பிக்கப்பட்டது. இச்சந்தர்ப்பத்தில் ஸ்ரீமான் அப்துல்ரசூல் அலாடைன் விஸ்ராம் என்பார் ஐரோப்பியர்களுக்கெனப் பிரத்தியேகப்படுத்திவைக்கப்பட்டிருந்த இடத்தில் தமக்குச் சொந்தமாக இருந்த நிலத்தை விற்க ஏற்பாடு செய்தார். அரசாங்கத்தார் இந்நிலத்தை ஐரோப்பியரல்லாத பிறருக்கு விற்கக் கூடாதென்று சட்டமையிட்டனர். இந்த நியாயமற்ற அரசாங்கக் கட்டளைக்கு அவர் இணங்க மறுத்துவிட்டுத் தமக்குக் கொடுக்கப்பட்டிருந்த 'ஹானரபில்' என்ற பட்டத்தையும், சட்டசபை ஸ்தானத்தையும் இராஜிநாமா செய்துவிட்டார். இம்மாதிரி செய்துவிடவே குடியேற்ற நாட்டு ஆபீஸார் வெள்ளையரல்லாத பிற நிறத்தினரை அப்புறப்படுத்தும் விஷயத்தை நிறுத்தி வைக்க வேண்டுமென்று தந்தி மூலமாய்த் தெரிவிக்க அவ்விஷயம் நிறுத்தி வைக்கப்பட்டுவிட்டது.

கிசுமு என்பது விக்டோரியா நையான்ஜா ஏரியின் கிழக்குக் கரையில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் ஒரு முக்கிய துறைமுகமாகும். இவ்விடத்தில் தான் உகந்தா ரேயில்வே முடிவடைகிறது. இவ்விடத்திலிருந்து தான் ஏரியில் செல்லும் கப்பல்கள் புறப்படுகின்றன. இது ஐரோப்பியர்களுக்காகப் பிரத்தியேகப்படுத்தி வைத்திருக்கும் இடம், சுகாதாரத்திற்கு ஏற்றது. ஏரியின் அருகில் இருக்கிறதைப்போல் இவ்விடத்தில் உஷ்ணம் அதிகமாயிராது. இவ்விடத்திலும் நல்லமாதிரியான நிலங்கள் யாவும் ஐரோப்பியர்களுக்கெனப் பிரத்திப்யேகபடுத்திவைக்கப்பட்டிருக்கின்றன. அறிஞர் சிம்ப்சன் ஆசியாக்காரர்களும் ஆப்ரிக்கர்களும் சுகாதாரக் குறைவான இடங்களில் வசிக்கலாமென்றும் ஐரோப்பியர்கள் அம்மாதிரி வசிக்க முடியாதென்றும் நினைக்கிறார் போலும்!

உகந்தாவிலிருக்கப்பட்ட முக்கிய நகரங்களில் கம்பாலா அதிக முக்கியமானது. இவ்விடத்தில் ஐரோப்பியர்களைக் காட்டிலும் இந்தியர்கள் எண்ணிக்கையில் அதிகமாயிருந்து வருகிறார்கள். இவ்விடத்திலும் இடமின்மையால் இந்தியர்கள் சுகாதாரக் குறைவான இடங்களில் வசித்துக்கொண்டு நோய் வாய்ப்பட்டு வருகிறார்கள். இவ்விடத்திலும் ஐரோப்பியர்கள் மலைப் பிரதேசங்களைத் தங்கள் வாசஸ்தலமாக்கிக் கொண்டு என்ன கௌரவம் வாய்ந்த இந்தியர்களுக்கும் இடங்கொடுக்காமல் இருந்து வருகிறார்கள்.

'மாடர்ன் ரேவ்யூ'



Printed and Published by T. V. Kalyanasundara Mudaliar, at the Sadhu Press, 44-Bazaar Road, Royapettah, Madras.

